# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம்
நெல்வளமே நாட்டின்வளம்


செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 2 விளைச்சல் : 18 திருவள்ளுவர் ஆண்டு 2052 நவம்பர்த் திங்கள் – 2021


## உள்ளே...







# எந்திரவியல் கலைச்சொற்கள்

| | |
|---|---|
| Radiator | : குளிர்ப்பி |
| Steering wheel | : சுக்கான் |
| Bumper | : முட்டுத்தாங்கி |
| Spring leaf | : வில்பட்டை |
| Silencer | : ஓசையொடுக்கி |
| Spark plug | : பொறிச்செருகி |
| Air Cylinder | : காற்றுருளை |
| Clutch blade | : விசைக்கவ்வி |
| Fan belt | : விசிறிவார் |
| Generator | : மின்னாக்கி |
| Regulator | : சீராக்கி (அ) சீர்படுத்தி |
| Natural magnet | : இயற்காந்தம் |
| Artificial magnet | : செயற்காந்தம் |
| Oil pump | : எண்ணெய் எக்கி |
| Air filter | : காற்று வடிப்பான் |
| Starting system | : இயக்கியமைப்பு |
| Petrol enginen | : கல்நெய்ப் பொறி |
| Lighting system | : ஒளி விளக்கமைப்பு |
| Head light | : முகப்பு விளக்கு |
| Safety stop | : காப்பு நிறுத்தம் |
| Water colling system | : நீர்க் குளிரமைப்பு |
| Water pump | : நீர் எக்கி |
| Over flow tube | : வழிவுகுழாய் |
| Temprature gauges | : வெப்பளவி |
| Clutch | : வேகமாற்றி |

**சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2052 – ஐப்பசி
நவம்பர்த் திங்கள் 2021

ஆசிரியர் : முனைவர் **கோ.விசயராகவன்**
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே.கார்த்திக்

இதழ்க்குழு : திருமதி. ஜெ. சாந்தி
திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திரு. ப. தீபக்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர், சென்னை - 600 028.
கட்டணமில்லா அழைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

# மாந்தர்களும் மதிப்புமிக்க சொற்களும்

## தந்தை

எந்தை (என் தந்தை), எம்மான், தகப்பன், நுந்தை (உன் தந்தை), அப்பா, அப்பன், அத்தன், அச்சன், முத்தன், அத்தன் என்றால் தகப்பன் என்று பொருள். பழைய இலக்கியங்களில் அத்தா என்ற சொல் அதிக அளவில் ஆளப்பட்டுள்ளது.

"அத்தா இதுகேள் என ஆரியன் கூறுவான்"
– கம்பராமாயணம்

"அத்தா உனக்காளாய் இனி அல்லேன் எனலாமே"
– தேவாரம்

"அத்தா உன் அடியேனை அன்பால் ஆணமாய்"
– அப்பர்

பிதா, தலைவன், ஐயா, ஆஞ்ஞான் ( ஆ ஞா ) என்ற சொற்களும் தந்தையைக் குறித்தே வழங்கப்பட்டுள்ளன. "தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை" என்பது சான்றோர் வாய்மொழி. ஒரு குழந்தையின் வளர்ச்சியிலும் முன்னேற்றத்திலும் தந்தை எனும் நிலையில் இருப்பவரின் பங்களிப்பு மிக இன்றியமையாதது.

## தாய்

உயிரியல் மற்றும் குமுக நோக்கில் ஒரு குழந்தையை ஈன்றெடுக்கும் பெண் தாய் அல்லது அன்னை எனப்படுகிறாள்.

அம்மா, அன்னை, ஆய், ஈன்றாள், அன்னாய், தல்லி (தில்லிக்கு இராசா ஆனாலும் தல்லிக்குப் பிள்ளை), அவ்வை, ஆத்தாள், தள்ளை, அம்மை, அம்மு, அம்மே, ஆத்தா, தாயார், மாதா.

"அ"என்பது உயிரெழுத்து, "ம்"என்பது மெய்யெழுத்து, "மா" என்பது உயிர்மெய் எழுத்து. தன் உயிரான தசையை மெய்யான உடம்பில் பத்துமாதம் சுமந்து பெற்றெடுப்பதால் தான் "அம்மா" என்று அன்பொழுக அழைக்கின்றோம். இத்தகைய பொருள்பொதிந்த சொற்கள் தமிழ்மொழியில் ஏராளமாக உள்ளன.

## கணவன்

கொழுநன், இல்லாளன், அகமுடையான், ஆம்படையான், வீட்டுக்காரர், காத்தவன், என்னவர், மணாளன், மணவாளன், உற்றான், கொண்டான், தலைவன், நாயகன், கிழவன், உரியவன், தலைமகன், உடனிகழ்வான், தம்போன், குடும்பி, தாட்டான், பத்தன், மகிணன், கண்ணாளன், அன்பன், கேள்வன், நாச்சியன், விழைந்தோன், கூந்தர்கிழவர், ஆள், ஆளன், வரன், வல்லவன், தற்கொண்டான், ஆர்வலன், அகவாளன், இல்லாளன், இறை, ஐ, இற்கிழவன், வேட்கைத் துணைவன், துணைவன் எனப் பல்வேறு சொற்கள் கணவனைக் குறித்து வழங்கப்பெறுகின்றன.

கணவன் – கண் அவன். உடல் உறுப்புகளில் கண்கள் முதன்மை பெறுவது போல் வாழ்விற்குக் கணவன் ஆகிறான். கொழுநன் – கொழுகொம்பைப் பற்றிப் படரும் கொடிபோல் மனைவிக்குக் கொழுநன். துணைவன் – துணை நிற்பவன். பெண்ணின் வாழ்விற்கு என்றும் துணை நிற்பவன் கணவன். மொத்தத்தில் தன்னைத் திருமணம் செய்துகொண்ட பெண்ணிற்குக் கண்போன்று இருந்து காதல், அன்பு, நம்பிக்கை தந்து துணையாக நிற்பவன்.

## மனைவி

மனைவி (மனை– வீடு, வி – விளங்கச் செய்பவள்) வீட்டை விளங்கச் செய்பவள் என்பது பொருள். துணைவி, கண்ணாட்டி, கற்பாள், காந்தை, வீட்டுக்காரி, கிழத்தி, குடும்பினி, பாரியாள், பொருளாள், இல்லத்தரசி, வாழ்க்கைத் துணை, வேட்டாள், தம்பிராட்டி, தலைமகள், தாரம், நாச்சி, பரவை, பெண்டு, இல்லாள், மணவாட்டி, பத்தினி, கோமகள், அகமுடையாள், நாயகி, பெண்டாட்டி, மனைக்கிழத்தி, குலி, வல்லபி, வனிதை, ஆயந்தி, ஊடை, கடகி, தம்மேய், அன்பி, மனையுறுமகள்.

ஓம் என்ற (பிரணவ) மந்திரம் அடியாரை உயர்ந்த கதிக்கு இட்டுச் செல்வதுபோல் எல்லோரையும் அரவணைத்து உயர்ந்த நிலைக்கு இல்லத்தை அழைத்துச் செல்பவள்.

மனைவி என்ற சொல்லைவிட தாரம் உயர்ந்தது. தாரம் என்பது உயர்ந்த நிலைக்கு அழைத்துச் செல்வது.

## தம்பி

இளையவன், இளையோன், பின்னவன், பின்னன், பிற்பிறந்தான், இளவல், இளவன்.

## தங்கை

தங்கை என்ற சொல் அக்கை என்ற சொல்லின் எதிர்வடிவமாகப் பிறந்திருக்க வேண்டும்.

தங்கச்சி, இளங்கிளை, இளையவள், இளையோள், இளவள், கை, பின்னை, பின்னவள், பிற்பிறந்தாள்.

### அண்ணன்

தமையன், அண்ணல், அண்ணாச்சி, , அத்தன், இறை, சேட்டன், தன்னை, மூத்தோன், முன்னவன், முன்னை, முற்பிறந்தான்.

### தமக்கை

அக்கச்சி, அக்கா, அக்காத்தை, அப்பி, ஆச்சி, முற்பிறந்தாள், அன்னை, தன்னை, முன்னை, அக்காள்.

இவ்வாறு மாந்தரின் பண்புகளை விளக்கும் மதிப்புமிக்க சொற்கள் தமிழில் ஏராளம் உள்ளன. அவற்றை இளையதலைமுறைக்கு எடுத்துரைத்து உணரச்செய்து, தமிழ்மொழியின் சொல்வளத்தைக் காப்பதற்கான செயலாக்கங்களைச் செய்வது நம் அனைவரின் தலையாய கடமையாகும்.

தமிழ்மொழியின் கலைச்சொல் வளத்தைப் பெருக்கும் நோக்கில் இவ்வியக்ககம் வெள்ளிக் கிழமைதோறும் இணையவழியில் நடத்திவரும் பன்னாட்டு கலைச் சொல்லாக்கப் பயிலரங்கில் பங்கேற்று, கலைச்சொற்களை அறிமுகம் செய்துவரும் சொல்லாக்க வல்லுநர்களுக்கு மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இம்மாத "சொல்வயல்" இதழுக்குத் தனது ஆய்வுக்கட்டுரையை வழங்கி அணிசேர்த்த தஞ்சை, தமிழ்ப் பல்கலைக்கழக மேனாள் துணைவேந்தர் முனைவர் ம. இராசேந்திரன் ஐயா அவர்களுக்கும், "தமிழ் அகராதியியலின் தந்தை" எனப் போற்றப்படும் வீரமாமுனிவரின் தமிழகராதியியல் உத்திகளை விளக்கும் வகையில் ஆய்வுக்கட்டுரை வழங்கிய பிரான்சு நாட்டைச் சேர்ந்த அகராதியியலாளர் முனைவர் ச. சச்சிதானந்தம் ஐயா அவர்களுக்கும், வேர்ச்சொல் அடிப்படையில் "நகை" எனும் பொருண்மையில் ஆய்வுக்கட்டுரை வழங்கிய இவ்வியக்கக மேனாள் பதிப்பாசிரியர் முனைவர் மு. கண்ணன் அவர்களுக்கும் உளம்நிறை நன்றியை உரித்தாக்குவதில் மகிழ்கிறேன்.

அகராதியியல் உலகம் போற்ற, மறைந்தும் புகழாக வாழும் உருசியப் பேராசிரியர் அலெக்சாண்டர் துபியான்சுகி அவர்களின் "Tamil Dictionaries In Russia" எனும் ஆங்கில ஆய்வுக்கட்டுரை இவ்விதழுக்குப் பெருமை சேர்க்கிறது. அப்பெருமகனாருக்கும் என் நன்றி மலர்களைக் காணிக்கையாக்குகிறேன்.

தமிழ்மொழியின் சொற்பொருள் நுட்பத்தை விளக்கும் வகையில் இவ்விதழுக்கு ஆய்வுக்கட்டுரைகள் வழங்கியுள்ள திருப்பத்தூர் தூயநெஞ்சக் கல்லூரித் தமிழ்த்துறைத்தலைவர் முனைவர் பி.பாலசுப்பிரமணியன், முதுகலைத் தமிழ் மாணவர் மு.ஜெயசூரியா ஆகியோருக்கும் என் நன்றியும் வாழ்த்தும் உரித்தாகுக.

தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்.

## ஒலிவகை

| | | |
|---|---|---|
| அரவம் | = | பொதுவான ஒலி |
| குரல் | = | தொண்டையொலி |
| ஆரவாரம் | = | பெரிய ஊர்வலத்தில் கேட்கும் பல் இயவொலி |
| இரைச்சல் | = | மழை, அருவி, சந்தைக்கூட்டம் முதலியவற்றின் பேரொலி |
| ஆர்ப்பு | = | மாபெருங் கூட்டத்தின் வாழ்த்து அல்லது கண்டனவொலி |
| சிலம்பு | = | எதிரொலி |
| சிலை | = | பாடும்போது கலகலவென்றிலங்கும் ஒலி |
| சந்தடி | = | விழா நிகழிடத்திலும் மாநகர வீதியிலும், பல்வேறு கவனமுள்ள மக்கள் தொழிலாலுண்டாகும் ஒலி |
| கூச்சல் | = | பலர்கூடி கத்துமொழி |
| பூசல் | = | சண்டையிலும் போரிலும் கேட்கும் ஒலி |
| முழக்கம் | = | இடியாலும் பறையாலும் உண்டாகும் பேரொலி |
| இசை | = | இனிய ஒலி |
| ஒலி | = | எழுத்தொலி |
| ஓசை | = | சொற்றொடர் அல்லது பாட்டொலி |
| சந்தம் | = | அசையொத்த அடிகளைக் கொண்ட பாட்டொலி |
| வண்ணம் | = | எழுத்தொத்த அடிகளைக் கொண்ட பாட்டொலி |

சி.பூ.மணி உலகத் தமிழ்க் கழகம் பெங்களூரு. ( பாவாணர் சொல்லாய்வு)

# பண்டை இலக்கிய மொழிபெயர்ப்பில் சிக்கல்கள்

## ( தமிழிலக்கிய மொழி பெயர்ப்புகள் )



முனைவர் ம. இராசேந்திரன்
மேனாள் துணைவேந்தர், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்

### படைப்பாக்கமும் புரிதலும்

படைப்பாளி தனக்குள் நிகழ்த்தும் கருத்தாடலை ஆக்கமரபுகளின் வழியே படைப்பாக உருவாக்குகிறார். அந்தப் படைப்பினைப் புரிந்துகொள்ளல் என்பது அதன் ஆக்கமரபுகளை அறிந்து அந்தப் படைப்பாளியின் கருத்தாடலை மீட்டறிதலேயாகும்.

அவ்வாறு மீட்டறிய அந்தப் படைப்பாளியின் காலத்திய சமுதாயப் பொருளாதாரப் பண்பாட்டு நிலைகளையும் மொழியமைப்புக் கூறுகளையும் தெளிவாகத் தெரிந்திருத்தல் வேண்டும்.

இவ்வாறெல்லாம் படைப்பாளியின் கருத்தாடலை நெருங்கி உணரும் நிலைக்கேற்பவே படைப்பினைப் பற்றிய நமது புரிதலின் அளவும் அமைய முடியும்.

கால இடைவெளியில் படைப்பாளியின் கருத்தாடல் அதன் ஆக்கமரபு வழியாகப் புரிந்துகொள்ளப்பட இடையிடையே விளக்கங்கள் அல்லது உரைகள் தோன்றுகின்றன.

### மூலப் படைப்பும் மொழிபெயர்ப்பும்

விளக்கங்கள் அவை தோன்றும் காலத்தின் சமுதாயப் பொருளாதாரப் பண்பாட்டு நிலையையும் மொழி அமைப்பையும் அடிப்படையாகக் கொண்டு தம் காலத்தின் தேவையையும் அளிப்பவரின் மனப்போக்கையும் பின்புல அறிவையும் கொண்டே அமைகின்றன.

இதனைக் கருத்தில் கொண்டு படைப்பாளியின் கருத்தாடலைப் புரிந்துகொளப் பயன்படுவனவற்றுள் ஒன்றாக விளக்கங்களைக் கருதாமல், விளக்கங்களையே படைப்பாளியின் கருத்தாடலாக எடுத்துக் கொள்வதால் மற்றொரு மொழியில் பெயர்க்கும்போதும் மூலப்படைப்பிற்குப் பதிலாக விளக்கங்களே பெயர்க்கப்படுகின்ற நிலை ஏற்படுகிறது.

இவ்வாறு பண்டைத் தமிழிலக்கிய மொழிபெயர்ப்பில் மூலநூலாசிரியரின் கருத்தாடலுக்குப் பதில் உரையாசிரியர்களின் உரையே பெரும்பாலும் மொழிபெயர்க்கப்படுகின்றது என்பதையும் இந்தப் பிரச்சினையை எவ்வாறு எதிர்கொள்வது என்பதையும் பற்றியது இக்கட்டுரை.

### அறிவியல் மொழிபெயர்ப்பும் இலக்கிய மொழிபெயர்ப்பும்

நூலாசிரியரின் கருத்தாடலைப் புரிந்துகொண்ட பின்னரே (ஆக்கமரபுகளின் வழியே) ஒரு நூல், விரும்பும் மொழியில் (அதன் ஆக்கமரபுகளின் வழி) பெயர்க்கப்படுதல் வேண்டும். இதனைப் பின்கண்டவாறு அட்டவணைப் படுத்தலாம்.

| படைப்பு உருவாக்கப் படிமுறை | புரிதல் படிமுறை | மொழிபெயர்ப்புப் படிமுறை |
|---|---|---|
| கருத்தாடல்<br>↓<br>ஆக்கமரபுகள்<br>↓<br>படைப்பு | படைப்பு<br>↓<br>ஆக்கமரபுகள்<br>↓<br>கருத்தாடல் | கருத்தாடல்<br>↓<br>மொழிபெயர்க்க விரும்பும் மொழியின் ஆக்கமரபுகள்<br>↓<br>மொழிபெயர்ப்பு |

அறிவியல் நூல்களில் மொழிசாராக் கூறுகள் (Non Verbal) தவிர்த்த மொழிசார் பகுதியை (Verbal) மொழிபெயர்ப்பதில் மொழிசார்ந்த கலைச்சொல்லாக்கமும் கருத்தாடல் அமைப்பும் (வரையறை, விளக்கம், வருணனை போன்றவை) பிரச்சனைகளாக இருக்கின்றன.

இயற்கை பற்றிய அறிவியலை மொழிபெயர்ப்பதைவிடச் சமூக அறிவியலை மொழிபெயர்ப்பதில் மொழிபெயர்ப்பாளரின் சமூகநோக்கும் இணைந்து கொள்வதால் ஒவ்வொருவரும் அவரவரது நோக்கிற்கு ஏற்பவும் புரிதலுக்கு ஏற்பவும் மொழிபெயர்க்கின்றனர். இலக்கியம் சமூகம் சார்ந்து மொழிவழி வெளிப்படுவதால் மொழிபெயர்ப்பதில் நேர்கொள்ள வேண்டிய பிரச்சனைகள் குறிப்பிடத்தக்கனவாக இருக்கின்றன.

### இலக்கிய மொழிபெயர்ப்புக்குத் தேவையானவை

1.மூலநூல் மொழியின் படைப்பாக்கமரபுகளையும் மொழிபெயர்க்க விரும்பும் மொழியின் படைப்பாக்க மரபுகளையும் (மொழிப்புலமை, மொழிவழிச்செயல் (Speech Act) சொல் தேர்வு, சொல் புழக்கம், உத்திகள் தொடர் அமைப்பு போன்ற புலப்பாட்டு நெறிகள்; இலக்கண விதிகள், மொழிமரபு (I Know him "நான் அவரைத் தெரியும்; எனக்கு அவரைத்தெரியும். It rains • அது மழை பெய்கிறது; மழை பெய்கிறது போன்றவை) அறிதல்.

2.மூலநூல் மொழியின் பண்பாட்டுக் கூறுகளையும், மொழிபெயர்க்க விரும்பும் மொழியின் பண்பாட்டு கூறுகளையும் (You - நீங்கள். He -அவன், அவர், அவர்கள்) அறிதலும் இணைத்தலும்,

3. மூல நூலாசிரியரின் கருத்தாடலை உணர்த்த விரும்பும் நோக்கத்தை அறிதல்.

இவற்றுள் முதல் இரண்டும் கருத்தாடலைப்

புரிந்துகொள்ளவும், மொழிபெயர்க்கவும் ஓரளவு உதவக்கூடும் எனினும் மூல நூலாசிரியரின் கருத்தாடலை முழுமையாகப் புரிந்துகொள்ள மேற்குறிப்பிட்ட மூன்றாவது கூறு மிகவும் அவசிய மானதாக அமைகிறது.

### பண்டைத் தமிழிலக்கியத்தில் கருத்தாடலைப் புரிதல்

கருத்தாடலைப் புரிந்துகொள்ளல் என்பது நூலாசிரியன் மொழி வழியே முன்வைக்கும் பொருள், உணர்த்தும் நோக்கம் ஆகிய இரண்டையுமே புரிந்து கொள்ளல் என்பதாகும். பண்டைத் தமிழ் இலக்கியங்கள் பெரும்பாலும் உரையாசிரியர்களைக் கொண்டே விளங்கிக் கொள்ளப்படுகின்றன. உரைகள் அவை எழுதப்பட்ட காலத்தின் தேவைக்கும் ஆசிரியரின் மனப்போக்கிற்கும் ஏற்ற பொருள்களையே தருகின்றன. அதனால்தான் ஒரே நூலுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட உரைகள் தோன்றியிருக்கின்றன.

அவ்வாறு தோன்றிய உரைகள், மூல நூலாசிரியரின் கருத்தாடலை உரியவாறு உணர்ந்திட உதவமுடியாதபோது, அத்தகைய உரைகளை மட்டும் கொண்டு புரிந்துகொள்ளப்படும் இலக்கியங்களின் மொழிபெயர்ப்பு உரையின் மொழிபெயர்ப்பாக அமைகிறதே தவிர மூல நூலின் மொழிபெயர்ப்பாக அமைவதில்லை. அது குறுந்தொகைப் பாடல் (8) மொழிபெயர்ப்பின்வழி இக்கட்டுரையில் நிறுவப்படுகிறது.

#### குறுந்தொகைப்பாடல் (8)

கழனி மாஅத்து விளைந்துகு தீம்பழம்
பழன வாளை கதூஉம் ஊரன்
எம்மில் பெருமொழி கூறித் தம்மில்
கையும் காலும் தூக்கத் தூக்கும் ஆடிப்பாவை போல
மேவன செய்யும்தன் புதல்வன் தாய்க்கே

#### ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ள உரை

"வயலின் பக்கத்தில் உள்ள மரத்திலிருந்து முற்றக் கனிந்து வீழ்ந்த இனிய பழத்தை நீர் நிறைந்த அந்த வயலில் உள்ள வாளை மீன்கள் கவ்வி உண்ணும் இடமாகிய ஊரையுடைய தலைவன். எம்முடைய வீட்டில் பெருமித மொழிகளைச் சொல்லிச் சென்று, தம்முடைய வீட்டிலே, தம்முன் நின்றார் கைகால்களைத் தூக்கத் தானும் அவ்வாறே தூக்கும் கண்ணாடியில் தோன்றுகின்ற பாவையாகிய நிழலுருவைப் போலத் தம்முடைய இல்லத்தில் புதல்வனின் தாயாகிய மனைவிக்கு அவள் விரும்பியவற்றைச் செய்வான்" (மு. சண்முகம் பிள்ளை, 1985)

#### 'ஆடிப்பாவை'க்குத் தரப்படுகிற பொருள்

இப்பாடலில் 'ஆடிப்பாவை' என்பதற்கு, "கண்ணாடியில் தோன்றுகின்ற நிழலுரு" என்ற பொருளே திருக்கண்ணபுரத்தான் சௌரிப்பெருமாள் அரங்கன் வெளியிட்ட முதல் பதிப்பிலிருந்து (1915) தமிழ்ப்பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ள பதிப்பு (சண்முகம் பிள்ளை 1985) வரையில் இடம் பெற்றுள்ளது[1]. பேராசிரியர், நச்சினார்க்கினியர், உ.வே.சா., ரா.ராகவ ஐயங்கார் உட்பட அனைத்து உரையாசிரியர்களும் இக்கருத்தில் மாறுபடவில்லை.

#### அதற்கான காரணங்கள்

1. "ஆடியுட் பாவைபோல் நீ அணங்கிய தணங்க வென்றான்" எனும் சீவகசிந்தாமணியின் பாடல் (957) வரிக்கு, "கண்ணாடியில் பாவைபோல நீ வருந்திய தொழிலுக்கு வருந்தும்படியாக" என்று உரை எழுதிய நச்சினார்க்கினியரே குறுந்தொகைப் பாடலுக்கும் உரை எழுதியுள்ளார்.

2. சீவகசிந்தாமணியைப் பதிப்பித்த உ.வே.சா. குறுந்தொகையைப் பதிப்பித்துள்ளார். மேற்குறிப்பிட்ட இவையே குறுந்தொகையின் 'ஆடிப்பாவை'க்குச் சீவகசிந்தாமணியைப் போன்றே 'கண்ணாடியில் தோன்றுகின்ற நிழலுரு' என்று உரை தோன்றவும் தொடரவும் காரணங்களாக இருந்திருக்கலாம்.

#### பாடலின் மொழிபெயர்ப்புகள்

இப்பாடலின் 'ஆடிப்பாவை'யை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த ஏ.கே. ராமானுஜன் (1967:22)

When others raise their hands and feet
he will raise his toe
like a doll in a mirror

என்றும்

**எம்.எல் தங்கப்பா** (1970:36)

He now dances to her tune
Even as the very image of herself
In the mirror

என்றும்

**முத்து சண்முகம் – டேவிட்** (1976:256)

He lifts his arms and legs
like an image in the mirror
a puppet to every wish
of his son's mother.

என்றும் உரையாசிரியர்களின் கருத்திற்கேற்பவே மொழிபெயர்த்துள்ளனர்.

#### ஆடிப்பாவைக்கு உரை பொருந்தாமை

1. சங்க இலக்கியத்திற்குப் பொருள் கண்டிடச் சீவகசிந்தாமணியை விடவும் சங்க இலக்கியங்களே பயன்பட வேண்டும்.

2 சங்க இலக்கியத்தில் 'ஆடிப்பாவை' என்று ஒரு பாடலில் (குறுந்தொகை) மட்டுமே வந்துள்ளது.

3. சங்க இலக்கியத்தில் 53 இடங்களில் 'ஆடி' என்ற சொல் இடம் பெற்றுள்ளது[2] ஆனால் 'ஆடிப்பாவை' என்ற இடம்தவிர வேறு எந்த இடத்திலும் கண்ணாடி என்ற பொருளை உரையாசிரியர்கள் தரவில்லை. மாறாக நீராடுதல், விளையாடுதல், ஆடுதல், பறத்தல், ஆர்த்தல், கள்ளுண்டு ஆடுதல், கூத்தாடுதல் ஆகிய பொருள்களே தரப்பட்டுள்ளன.

4. சங்க இலக்கியத்தில் 77 இடங்களில் 'பாவை' என்ற சொல் இடம்பெற்றுள்ளது[3]. ஆனால் ஆடிப்பாவை தவிர பிற இடங்களில் "கண்ணாடியில் தெரியும் நிழலுரு' என்ற பொருள் தரப்படவில்லை. மாறாக, பாவைக் கூத்து, விளையாட்டுப்பாவை, மணல் பாவை, வெறியாட்டப்பாவை. சுவர்ப்பாவை, கோரைப்பாவை, கண்மணிப்பாவை, தலைப்பகுதி அல்லது நுனிப்பகுதி ஆகியவை பொருளாகத் தரப்பட்டுள்ளன.

5. கண்ணாடி முன் நின்று கையையும் காலையும் தூக்குதல் இயல்பன்று என்பதால் இயல்பற்ற ஒன்று சங்க இலக்கியத்தில் உவமையாக வருதல் அரிது.

6 குறுந்தொகையில் இப்பாடல், பரத்தை தலைவியைக் குறைகூறுவதாக அமைந்துள்ளது. தலைவன் தலைவியின் கைப்பாவையாக இயங்குகிறான். இயக்குபவள்அவள்; இயங்குபவன் அவன்; விசைக்கயிறு புதல்வன். மறைவாக இருந்து ஆட்டிவைக்கும் தலைவியையும் அதற்கேற்ப ஆடும் தலைவனையும் கூறுவதற்குத்தான் 'கையும் காலும் தூக்கத் தூக்கும் ஆடிப்பாவை' உவமையாக்கப்பட்டுள்ளது. கண்ணாடியில் முன் நிற்பவர் வடிவமும் செயலும் மட்டுமே தெரியும், பின்னிருந்து இயக்குவதற்கேற்ப இயங்குதல் என்பதற்குக் கண்ணாடி நிழலுகு உவமையாகாது.

7. சங்க இலக்கியத்தில் பாவையின் வடிவம், இயக்கம், ஆடுகளம், பயன்படும் விசைக்கயிறு, அதைப் பாதிக்கும் மழை, வெயில் பாவையாட்டி என்று பாவைக்கூத்துப் பற்றி கூறும் பாடல்கள் உள்ளன. அவை வருமாறு

i) "முடிவலை முகந்த முடங்கிறாப் பாவை" (நற்றிணை : 49)

(பாவையின் கைகால்கள் இணைப்புடனும் கயிற்றுடனும் இறாலுக்கு உவமை கூறப்பட்டுள்ளது)

ii) "... வேலன்
வெறியயர் வியன்களம் பொற்ப வல்லோன்
பொறியமை பாவையின்" (அகநானூறு : 98)

(பாவையாட்டியால் பாவைக்கூத்து களத்தில் நடத்தப்பட்டுள்ளது)

iii) "உருவுகிளர் ஏர்வினை பொலிந்த பாவை
இயல்கற் றன்ன" (அகநானூறு : 142)

(அழகு கிளர்ந்த பொலிவினையுடைய செய்தொழிலால் சிறந்த பாவை நடை கற்றது போன்று)

iv) வினையமை பாவையின் இயலி" (நற்றிணை : 362)

"முழவுமுகம் புலர்ந்து முறையின் ஆடிய
விழவொழி களத்த பாவை போல" (நற்றிணை : 360)

(முழவுடன் சேர்ந்து முறையுடன் ஆடிய பாவை, விழா முடிந்ததும் கேட்பாரற்றுக் கிடப்பது போல)

v) "அருப்பம் உடைத்தென்று ளெவ்வம் பொருந்தி
பொறிசேர் புனைபாவை போல" (கலித்தொகை : 146)

(பல உறுப்புகளையும் சுட்டி இயங்குவதோர் பொறியாகச் செய்த பாவை)

vi) "பெயலுற நெகிழ்ந்து வெயிலுறச் சாஅய்
வினையழி பாவையின் உலறி
மனையொழிந் திருத்தல் வல்லு வோர்க்கே" (அகநானூறு : 157)

(தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவிக்கு மழையில் நனைந்து வெயிலில் காய்ந்து உலறிப் போயிருக்கும் செயற்பாடற்றுப்போன பாவை உவமை கூறப்பட்டுள்ளது)

vii) நற்சினைப் பொறியறி பாவையின் கலங்கி" (நற்றிணை : 308)

(விசைக்கயிறு அறுபட்ட நல்ல வேலைப்பாடமைந்த பாவை, பிரிவுடன்படாது தலைவனின் மார்பில் முகம் புதைக்கும் தலைவிக்கு உவமை கூறப்பட்டுள்ளது)

## ஆடிப்பாவை = உரிய பொருள்

சங்க இலக்கியத்தில் மதுரைக்காஞ்சியிலும் (585) அகநானூற்றிலும் (301) ஆடி எனும் சொல் கூத்தாடுதல் எனும் பொருளில் இடம்பெற்றுள்ளது. அகநானூற்றில் (301) கூத்தர்களின் வாழ்க்கை கூறப்பட்டுள்ளது. பாவைக் கூத்தாடிகளின் வாழ்க்கையைக் கூறுவதாக அதைக் கருதிட இடம் தருகிறது. தமிழ் லெக்சிகனும் ஆடி என்பதற்குக் கூத்தர் என்று ஒரு பொருள் தருகின்றது. எனவே ஆடிப்பாவை என்பதற்குக் கூத்துப்பாவை, கூத்தாடிப்பாவை, பாவைக்கூத்து என்று கொள்வதே உரிய பொருளாக அமையும். மேலும்,

... மாற்றிரி
ஆடிப் பாவையோ டலர்நிழல் பாவை
கைகால் மெய்ப்பிறி தெவையும் பைப்பயத்
தூக்கிற் றூங்கி மேக்குயர் புயர்தல்
பொறியொடு சிவண லென்ன
அறிவொடு செறியு நெறிவகு முடலே

என்றுபாவைக்கூத்தின்வகைகளாகஆடிப்பாவையும் அலர்நிழல்பாவையும் ஞானாமிருதத்தில் கூறப்பட்டுள்ளதாக (உரையாசிரியர்கள் இதற்கும் கண்ணாடியில் தோன்றும் பாவை என்றே பொருள் கூறியுள்ளனர்) கொண்டால் ஆடிப்பாவை என்பது மரப்பாவையையும், அலர்நிழல்பாவை தோல்நிழல் பாவையையும் குறிப்பதாகக் கொள்ளலாம். இஃது எவ்வாறாயினும் ஆடிப்பாவை என்பது கண்ணாடியில் தோன்றும் நிழலுரு அன்று என்பது உறுதியாகிறது.

இவ்வாறு மூலநூலாசிரியர் மொழிவழி முன்வைக்கும் பொருளையும் அவர் உணர்த்த விரும்பும் நோக்கத்தையும் அறிந்து ஆடிப்பாவைக்குரிய பொருளை மீட்டறிய முடிகிறது. அப்போதுதான் இப்பாடலில் மூலநூலாசிரியர் உணர்த்த விரும்பியதை உணர்ந்து கொள்ளமுடிகிறது.

இவ்வாறு நூலாசிரியரின் கருத்தாடலை உணர்ந்து கொள்ள முடிந்தால்தான் மொழிபெயர்ப்பும் உரியவாறு அமைய இயலும். '

ஆடிப்பாவைக்கு'ச் சொல்லுக்குச் சொல் பொருள் காணுவதாக உரை அமைந்துள்ளதே தவிர மூல நூலாசிரியர் உணர்த்த விரும்பிய நோக்கத்தை இணைத்துக் காண்பதாக இல்லை என்பதால் குறுந்தொகைப் பாடலின் மொழிபெயர்ப்பாளர்கள் உரையாசிரியர்களை அப்படியே ஏற்று மொழி பெயர்த்துவிட்டனர்.

தலைவியின்இசைக்கேற்பத்தலைவன்ஆடுவதாகவும் பொம்மை போலத் தலைவன் ஆடுவதாகவும் கூட மொழிபெயர்த்தவர்கள் 'ஆடிப்பாவை' என்பதற்கு 'A doll in a mirror' என்றும் 'Image in the mirror' என்றும் மொழிபெயர்த்தற்குக் காரணம் உரையாசிரியர்களின் உரைகளே ஆகும். எனவே இப்பாடலின் உரை

மொழிபெயர்க்கப்பட்டுள்ளதே தவிர மூலம் மொழிபெயர்க்கப்படவில்லை எனலாம்.

## முடிவுரை

பண்டைத் தமிழிலக்கியத்தை அதன் படைப்பாக்க மரபுகளின் துணையுடன் நூலாசிரியர் மொழிவழி முன்வைக்கும் பொருளையும் உணர்த்தும் நோக்கத்தையும் அறிதல்வேண்டும். அதன்வழிக் கருத்தாடலை மீட்டறிந்து மொழிபெயர்க்க விரும்பும் மொழியின் படைப்பாக்க மரபுகளை விளங்கிக்கொண்டு இணைத்து மொழிபெயர்க்க வேண்டும்.

மொழிவழிப் பொருளை மட்டுமன்றி, உணர்த்த விரும்பும் நோக்கத்தையும் காணும்போக்கினைத் தமிழ் இலக்கண நூல்களும் ஆங்காங்கே சுட்டிச்செல்கின்றன (வினா, விடை வகைகள் போன்றவை) என்பது இங்கே குறிப்பிடத்தக்கது.

உணர்த்த விரும்பும் நோக்கத்தைக் காணாத, உரைகளால் மட்டுமே விளங்கிக் கொள்ளப்படுகிற பண்டை இலக்கியங்களின் மொழிபெயர்ப்பு என்பது உரைக்குரிய மொழிபெயர்ப்பாகுமே தவிர, மூலநூலின் மொழிபெயர்ப்பாகாது.

பண்டை இலக்கிய மொழிபெயர்ப்பில் உரையாசிரியர்களை நம்பிக்கைக்குரியவர்களாகஎடுத்துக்கொள்வதைவிடவும் மூல நூலாசிரியருக்கு மொழிபெயர்ப்பாளன் உண்மையுடையவனாக இருக்க வேண்டியது இன்றியமையாததாகும்.

பின் குறிப்புகள்

### 1. குறுந்தொகைப் பதிப்பு விபரம்

*சௌரிப் பெருமாள் அரங்கன், 1915.*

*கா.நமச்சிவாய முதலியார் மூலப்பதிப்பு (ஆண்டு இல்லை). இராமரத்தின ஐயர் உரை, கலாநிலையப்பத்திரிக்கை வெளியீடு. 1930.*

*அருணாசல தேசிகர் மூலப்பதிப்பு: 1933.*

*உ.வே.சா.. பதிப்பு, 1937.*

*ரா. ராகவ ஐயங்கார், 1946.*

*மர்ரே ராஜம், 1957,*

*புலியூர்க்கேசிகன், 1965.*

*தமிழ்ப் பல்கலைக் கழகம், 1985.*

### 2. ஆடி

*மதுரைக்காஞ்சி 585, குறிஞ்சிப்பாட்டு 56, பட்டினப்பாலை 93–99, மலைபடுகடாம் 433, நற்றிணை 41–2, 44–1, 96–4, 122–82, 147–9, 236– 8, 254–4, 259–5, 334–2, 373–5, 380–1*

*குறுந்தொகை 8–5, 46–4, 294–1*

*ஐங்குறுநூறு 76–2, 79–1, 50–3*

*பதிற்றுப்பத்து 3–7, 45–12, 55–14*

*பரிபாடல் 10–103, 11–83, 12–19*

*கலித்தொகை 1–6, 130–2, 95–31, 97–10, 98–20, 103–29, 38, 108–41, 113–24, 132– 16, 146–3*

*அகநானூறு : 20–8, 110–6, 181–10, 196–3, 2271–0, 228–5, 275–3, 296–5, 301–21, 302–4, 368–11, 370–4*

*புறநானூறு : 251–4, 332–3, 359–6, 393–21*

### 3. பாவை

*திருமுருகாற்றுப்படை 68*

*மதுரைக் காஞ்சி 410, 723*

*நெடுநல்வாடை 101*

*பட்டினப்பாலை 102*

*மலைபடுகடாம் 125*

*நற்றிணை 49–3, 127–7, 177–9, 179–2, 182–3, 184–7, 185–11, 191–3, 192–9, 201–11, 252–7, 301–6, 308–7, 314–10, 319–7, 360–2, 362–1*

*குறுந்தொகை 8–5, 48–1, 89–6, 100–6, 114–1, 195–, 220–2, 276–1, 278–3, 292–4*

*ஐங்குறுநூறு 124–2, 125–2, 128–3, 155–5, 187–3, 221–2, 307–4, 377–4, 383–5, 389–3*

*பதிற்றுப்பத்து 61–4, 88–29*

*பரிபாடல் 7–26*

*கலித்தொகை 22–5, 56–7, 59–5, 76–7, 114–33*

*அகநானூறு 5–21, 23–7, 62–15, 98–12, 127–8, 136–13, 142–21, 157–13, 165–12, 181–19, 2091–7, 212–1, 229–12, 265–9, 269–19, 320–12, 369–8, 370–14, 392–6*

*புறநானூறு 11–3, 235–12, 243–2, 251–2, 283–10*

## துணை நூல்கள்


1. Ramanujan, A.K. (1967) The Interior Landscape Love poems from a Classical Tamil Anthology, Bloomington, Indiana University Press.
2. Shanmugam Pillai, Muthu & Ludden, E. David (1976) Kurunthogai an anthology of classical love poetry, Madurai, Koodal Publisers.
3. Thangapa, M.L. (1970) Hues and Harmonies from an ancient land, Pandian Publications.
4. Widdowson, H.G. (1979) Explorations in Applied Linguistics. Vol I, Oxford, Oxford University Press.
5. Widdowson, H.G. (1984) Explorations in Applied Linguistics Vol II, Oxford, Oxford University Press.
6. *சண்முகம் பிள்ளை (பதிப்பாசிரியர்) (1985) குறுந்தொகை, தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்,*
7. *துரைசாமிப்பிள்ளை, ஔவை சு. (பதிப்பாசிரியர்) (1954) ஞானாமிர்தம் மூலமும் உரையும்.*



நன்றி : Contribution of Tamil Culture to the Twenty First Century ஆய்வுக் கோவை உலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றம், சென்னை

# இத்தாலிய வேதியனின் தமிழகராதியியல் உத்திகள்

## 431st Constantin's B'day = Tamil Dictionary Day

### வீரமாமுனிவரின் 431வது பிறந்தநாள் - தமிழ் அகராதி நாள்




**அகராதியியலாளர், முனைவர் ச.சச்சிதானந்தம்**
பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவனம், பாரிசு, பிரான்சு


*__உத்தி__ – செல்வம், சொல், தந்திரவுத்தி,திருவுறுப்பு,தூக்கங்கள், தேமல், பாம்பின் படப்பொறி. சதுரகராதி (ஆய்வுப் பதிப்பு) : பெயரகராதி பக்கம் 33*



Costanzo Beschi




செந்தமிழ் இலக்கணம்




சதுரகராதி

## ஐரோப்பிய அருட்பணியாளர்களும் தமிழ் அகராதிகளும்

பதினைந்தாம் நூற்றாண்டில், கிறித்தவ மதப்பிரிவுகளைப் பரப்புவதற்காக ஐரோப்பியக் கண்டத்துப் போர்த்துக்கல், ஜேர்மனி, பிரான்சு,இத்தாலி, பிரித்தானியா முதலான நாடுகளிலிருந்து மத குருமார்கள் தென்னிந்தியாவிற்கு வந்தனர். மதங்களைப் பரப்ப வந்தவர்கள் மக்களுடன் பழகுவதற்காகத் தமிழ் படித்தனர். தமிழ் படித்தவர்கள் தமிழான தமிழ்மீது தமிழ் கொண்டார்கள்! அவ்வாறு அருட்பணியாளர்களாக வந்து, தமிழை ஐயந்திரிபற ஆழ்ந்தகன்று கற்று, இலக்கணங்கள்,இலக்கியங்கள் எழுதினர். அகராதிகள் இயற்றினர். நூல்கள் படைத்தனர். தமிழறிஞர்களாக, தமிழறிவில் தமிழரிலும் மிக்கார்களாகத் திகழ்ந்தனர். தம்தம்மதப் பணிகளும்,தமிழ்த்தொண்டுகளும் ஆற்றி வாழ்வைச் செலவுசெய்தனர்.

*__தமிழ்__ – மொழி, இனிமை, காதல் : மயிலை சீனி.வெங்கடசாமி ஆய்வுக்களஞ்சியம்*

தமிழ் கசடறக்கற்று, நன்கு பேசத்தெரிந்த முதல் ஐரோப்பியர் கிறித்தவ மறைப் பணியாளரான Henrique Henriques - ஹென்றிக் ஹென்றிக் என்ற போர்த்துக்கேயர். அந்த வேதியர் தான் முதல் தமிழ் அகராதியாளர்! முதல் தமிழ் இருமொழி அகராதியான தமிழ்-போர்த்துக்கேயச் சொல்லகராதியைத் தொகுத்தவரும் போர்த்துக்கேயரான Antao de Proença-அந்தஓ ட்து புறெஎன்ஸாதான்! ஜேர்மனியரான புரட்டஸ்தாந்து மதகுருவான Bartholomaus Ziegenbalg-பர்த் - தொலொமவுஸ் ஜீஏகென்பால்க் என்பவரும், பிரெஞ்சிய கத்தோலிக்க மதகுருவான Louis – Noêl de Bourzes- லூயி–நொஎல் ட்தூ பூர்ஷெவும் தமிழ் அகராதிகள் உருவாக்கத்தில் ஈடுபட்டிருந்தவர்கள் என ஐரோப்பிய – தமிழ் அகராதியியல் அறிஞர் Gregory James- கிறெகொறி ஜேம்ஸ்

எழுதிய தமிழ் அகராதிகளின் ஓர் வரலாறு என்ற அகராதியியல் களஞ்சியத்தில் உள்ளது. எனினும்,அந்தப் பாதையில் வரலாற்றில் இடம்பெற்ற வேதம் ஓதியவர்களில் மிகப்பெரிய இடத்தை வகிப்பவர்தான் இத்தாலியிருந்து வேதியராக, கொன்ஸ்ரான்ரைன் யோசெப் பெஷ்கி எனும் நாமத்தில் வந்து, தமிழகராதி நாளுக்குரியவராகப் பெயரெடுத்த வீரமாமுனிவர்!

### பிரான்சில் அகராதி தோற்றமும் பெஷ்கியின் பிறப்பும்

முதல் **இலத்தீன்** ஒருமொழி அகராதியான Dictionarium latinum **1502**இல் இயற்றப் பட்டது. பிரான்சில் பிரெஞ்சு ஒருமொழி அகராதி தோன்றிய **1680**ஆம் ஆண்டுதான், பெஷ்கி யும், இலத்தீன் தோன்றிய இத்தாலியில் Castiglione delle Stiviere – காஸ்திகிளிஓன் டெல்லெ ஸ்திவிள் எனும் சிற்றூரில் **08.11ஆம்** நாளில் பிறந்தார்.இவரின் பெற்றோர்கள் இட்ட கத்தோலிக்கப் பெயர் Costanzo Giuseppe Eusebio Beschi - கொஸ்தான் ஷோ ஜீயூசேசுப்பே ஏயூசேபிஓ பெஷ்கி ஆகும். இதில் பெஷ்கி என்பது குடும்பப்பெயர். கொஸ்தான்ஷோ ஜீயூசேசுப்பே என்பது கொன்ஸ்ரான்ரைன் யோசெப் என்று கொள்ளப்படும். கொஸ்தான்ஷோ ஜீயூசேசுப்பே பெஷ்கி கத்தோலிக்க மதப்பணி செய்வதற்காக இத்தாலியிலிருந்து போர்த்துக்கல் தலைநகரான லிஸ்போனிலிருந்து போர்த்துக்கேயக் கப்பலில். **1710**இல் கோவா வந்தடைந்து தென்னிந்தியா புகுந்த ஓர் வேதியர் (முனிவர்,குரு,மறைநூல் ஆசிரியன்).

பெஷ்கி இலத்தீன்,கிரேக்கம்,பிரெஞ்சு,போர்த்துக்கேயம்,ஹீப்று,ஆங்கிலம்முதலான மொழி களை நன்கு கற்றிருந்தார்.ஆரம்பத்தில் தொடக்கநிலை ஆசிரியராகப் பணியை ஆரம்பித்து, இலக்கணம்,கலையியல் பாடங்களைக் கற்பிக்கும்ஆசிரியரானார். கத்தோலிக்கச் சமயக்கல்வி பயின்று, குருவாகத் திருநிலைப்பட்டிருந்தார். முப்பதாவது வயதில் அம்பலக்காடு சேர்ந்து,அங்கு முப்பது நாள்கள் இடைத்தங்கிவிட்டு மதுரைக்குப் பயணமானார்.தமிழ்தோன்றிய மண்ணிலிருந்து தனது பணிகளை மேற்கொண்டார். பணி செய்த ஊர்களில் வாழ்ந்த காலங்களில் தமிழ், சமற்கிருதம், தெலுங்கு ஆகிய இந்தியமொழிகளையும் கற்றுக்கொண்டே இருந்தார். வீரமாமுனிவர் என்பது இயற்பெயராகவும் காரணப்பெயராகவும் பொருந்துகிறது என்பது தனிப்பொருத்தம்!

### பெஷ்கியின் தமிழ்ப்பல்கலை முயற்சிகள்

மதுரை,திருநெல்வேலி,திருச்சி, தஞ்சாவூர் ஆகிய இடங்களில் சமயப்பணி, தமிழ்ப்பணி, சமுதாயப்பணி,மருத்துவப்பணி,கலைப்பணி, இசைப்பணி ஆகிய பணிகள் புரிந்தார். இந்தத்தமிழ் இடங்களில் அந்தந்த ஊர்மக்களுடன் பழகிய காலத்தில் கண்ட பட்டறிவு நிமித்தம் தமிழ் மொழியில் இலக்கணம், இலக்கியம், மொழிபெயர்ப்பு,அகராதியியலில் ஐரோப்பியப் பரிமாணம் கொண்டு வந்து மேம்படுத்தவேண்டும் எனத் திடசங்கர்ப்பம்பூண்டு,அதற்காக உயிருள்ள வரை உழைத்த மகான் வீரமாமுனிவர். அவரின் படைப்புக்களில் பொறிக்கப்பட்டவை :

| | | |
|---|---|---|
| 01 | **பெருங்-காப்பியம் : 1** | தேம்பாவணி |
| 02 | **சிற்றிலக்கியங்கள்:7** | திருக்காவலூர்க் கலம்பகம்,கித்தேரியம்மாள்அம்மானை,அன்னை அழுங்கல் அந்தாதி, அடைக்கல மாலை,அடைக்கலநாயகி வெண்கலிப்பா,கருணாம்பரப்பதிகம்,வண்ணம். |
| 03 | **உரைநடை நூல்கள் : 9** | பரமார்த்தகுரு (அவிவிவேக பூரணகுரு)கதைகள், வேதியர் ஒழுக்கம், வேத விளக்கம், பேதக மறுத்தல், லுத்தேர் இனத்தியல்பு, வாமன் சரித்திரம், திருச்சபை கணிதம், திருக்கடையூர் திருச்சபை நிருபம், ஞானக்கண்ணாடி. திருக்குறள் உரை |
| 04 | **இலக்கண நூல்கள் : 4** | கொடுந்தமிழ் இலக்கணம், செந்தமிழ் இலக்கணம், தொன்னூல் விளக்கம், இலக்கணத் திறவுகோல். |
| 05 | **மொழிபெயர்ப்பு கள் : 5** | திருக்குறள் இலத்தீன் மொழிபெயர்ப்பு, ஆத்திசூடி, தேவாரம், திருப்புகழ்... பரமார்த்த குரு கதை பலமொழிகளில் மொழிபெயர்த்தார். |

| | | |
|---|---|---|
| 06 | **அகராதிகள்:** 4 | சதுரகராதி, தமிழ்- இலத்தீன் அகராதி, தமிழ் - பிரெஞ்சு அகராதி, போர்த்துக்கேயம்-இலத்தீன் -தமிழ் அகராதி. |

❶ தமிழ் எழுத்துச்சீர்திருத்தவாதி
❷ ஒப்பிலக்கண வாயில்
❸ தொகுப்புப் பணியின் வழிகாட்டி
❹ மொழிபெர்ப்புத் துறையின் வழிகாட்டி
❺ தமிழ்ச்சிறுகதையின் வழிகாட்டி
❻ தமிழ் உரைநடையின் தந்தை
❼ தமிழ் இலக்கண ஆசிரியர்(திருக்காவலூர்)
❽ தமிழ் அகராதியியலின் மூலவர் -தந்தை

கொஸ்தான்ஷோ தனது பெயரினைத் தமிழ்ப்பெயராகப்பூணுவதற்காகதைரியநாதசாமி என முதலில்மாற்றிக்கொண்டார். பின்னர்,அப்பெயர் வடமொழி என்பதனாலும்,தமிழைக் கசடறக் கற்ற தனாலும் தனது இயற்பெயரின் பொருளைத்தழுவிச் செந்தமிழில் வீரமாமுனிவர் *என மாற்றிக்* கொண்டார். கொன்ஸ்ரான்ரைன்: தைரியமானவன்,. வீரன்,யோசெப்-நாதன்,வளன்.தைரிய நாதர்(மதுரைமறைப்பணிக்களம்).வீரவளன்.வீரராரியன்(சதுரகராதி).ஆரியவளன்(தேம்பாவணி),வீரமா முனிவர் என்பன கொன்ஸ்ரான்ரைன் தனக்குத்தானே சூட்டிக்கொண்ட பெயர்கள் என்பதனை அவர் படைத்தநூல்களின் அகலவுரைகளில் காணமுடியும்.

ஆரியன் என்றால்அறிவுடையவன்,குரு,புலவன் என்ற பொருள்கள் சதுரகராதியில் உண்டு. இவருக்கு, செந்தமிழ்த்தேசிகன்,ஆரியவளவன், இஸ்மாத்தியசந்நியாசி(தூயமுனிவர்) ஆகிய பெயர்களும் காலத்திற்குக்காலம் புழக்கத்தில்இருந்தன.ஆயினும் வீரமாமுனிவர் எனும் நாமமே காலத்தை வென்று நீடித்துநிலைத்து நிற்கின்றது. இவர் தைரியமாக முனைந்து புனைந்த **தமிழ் இலக்கண, இலக்கியம்**, மொழிபெயர்ப்பு, ,**அகராதி** முயற்சி,எழுச்சி, வளர்ச்சிப் புரட்சிப்பணிகளை வேறுஎவருமே ஆற்றியதாக ஆவணங்களோ வரலாறோ காணப்பெற இல்லை! முப்பாலினைத்திருப்பணியாளர்களாகிய வீரமாமுனிவர் இலத்தீனிலும், ஜீ.யூ.போப் ஆங்கிலத்திலும் மொழிபெயர்த்ததன் வழி, *அது* மற்றைய உலக மொழிகளில் சென்றடைவதற்கு வித்திட்டனர்!

**தமிழகராதியியலின் மூலவர் - தந்தை வீரமாமுனிவர்**

- **எழுத்தும் அகராதியும் - மூலவரின் எழுத்துச்சீர்திருத்தம்**

மொழிக்கு அடையாளம் எழுத்து. எழுத்து இல்லாமல் அகராதி எனும் சொற்புத்தகம் இல்லை! தமிழில் நடைமுறை எழுத்துச் சீர்திருத்தம்செய்து, அகராதி அமைப்புக்கு மூலவிதை இட்டவர் பெஷ்கி!. அடிகளார் செய்த எழுத்துச் சீர்திருத்தங்கள் பின்வருமாறு:

- **உயிர் : எகார,ஒகார மாற்றம்**

**எ,ஒ** ஆகிய குற்றெழுத்து களின் மேலுள்ள புள்ளியை நீக்கி, ஏகாரத்திற்குக்கீழே காலிட்டு *நீட்டவும்* ஓகாரத்திற்குச் சுழிபோட்டும் திருத்தம் செய்தார்.

குறில் : **எ,ஒ** - நெடில்: பழையவிதி(தொல்காப்பியம், நன்னூல்): **எ்,ஒ்** - புதியவிதி(பெஷ்கி) : **ஏ,ஓ**

- **உயிர்மெய் : எகர,ஒகர மாற்றம்**

உயிர்மெய்க் குறில் எகர,ஒகரங்களுக்குப் புள்ளி இருக்கும் என்பது பழைய இலக்கண விதி. உயிர்மெய்க் குறில் எகர,ஒகரங்களுக்கு ஒற்றைக்கொம்பையும், நெடில்களுக்கு இரட்டைக் கொம்பையும் போட்டு திருத்தம் செய்தார்.
எகர,ஒகரம் : — **கெ,கொ** - நெடில்: **கே,கோ**

- **ரகர வரிவடிவ மாற்றம்**
  ரகத்திற்குக் கல் இட்டு மற்ற நெடில் குறியாகிய 'ா' காலிலிருந்து வேறுபடுத்தலாம்.

- **அ : அர- ஆ, எ: எர- ஏ**
  உயிர் எழுத்துகளின் அருகில் ர சேர்த்தும் (அ:அர- ஆ, எ:எர- ஏ), உயிர்மெய் எழுத்துகளின் மேல குறில் ஓசைக்குப் புள்ளி சேர்த்தும் திருத்தம் செய்தார்.

- **நிகண்டுக்கு மாற்றீடு அகராதி**

மொழி ஒன்றைக் கற்பவர், சொல்லுக்குப் பொருள்கூறும் நூலின் துணையின்றி அம்மொழியை யை விளக்கமாகவோ, ஆழமாகவோ கற்கமுடியாது. அந்தநோக்கில் தொகுக்கப் பெற்ற நூல் களாக நிகண்டுகள் பயன்கொள்ளப்பட்டன. இலக்கிய- இலக்கணங்களில் பயிற்சிக்கு முன்பாகவே நிகண்டு எழுத்தெண்ணி மனப்பாடம்செய்யவேண்டும் எனும் செயல்முறை தமிழறிஞர்களிடையே உலவியதால் கல்விநிலையில் நிகண்டு முதலிடத்தில் விளங்கியது. 'நிகண்டு தெரியாதவன் மண்டு'எனக் கருதும்நிலை பத்து நூற்றாண்டுகளுக்கும் மேலாக நிலவியது.

சொற்களைப் பல்வேறு புலங்களாகத் தொகுத்து,சொல்லெண்ணிப் பாடமாக்கும் மனனமுறை யைத்தவிர,சொற்களைத் தேடுவதற்கான முறையோ, பொருள்தரும் உத்திகளோ நிகண்டுகளில் இடம்பெறவில்லை! இவ்வாறு காலங்காலமாக நீடித்தநிலைப்பாட்டை உடைத்து,அகராதிகளை அறிமுகம் செய்து, தமிழ் வளர்த்தவர்கள் போர்த்துக்கேய, ஜெர்மானிய, இத்தாலிய, பிரெஞ்சிய கனடிய மற்றும் அமெரிக்கத் திருப்பணியாளர்களே!

நிகண்டு செய்யுள் நடையில்கண்டபடி அமைக்கப்பட்ட சொற்களுக்குப் பொருள் குறிக்க, அகராதி உரைநடையில் அகரவரிசையில் இடம்பெற்ற தனித்தனிச் சொற்களுக்குப்பொருள் தரு கின்றது.அகராதிகளைத் தமிழுக்குக்காட்டிய முன்னோடிகள் ஐரோப்பியர்களே! அந்தவகையில், பொருள்கண்டுபிடிக்கக் கடினமாக இருந்த நிகண்டுகளுக்கு ,மாற்றீடாகஒருமொழி,இருமொழி, பன்மொழி தமிழகராதிகளை முதன்முதலில் தொகுத்து அளித்தவர் 'தைரியமான வீரமாமுனிவர்!அவரின் தலைமுயற்சியாக1732இல் தொகுக்கப்பெற்றது **சதுரகராதி - Thesaurus linguae Tamulicae!**

முதலாவது நிகண்டான திவாகரத்தில் கடவுளைக் குறிக்கின்ற சொற்களில், சமணக் கடவுளான அருகனைக் குறிக்க 43 சொற்களும், சைவக்கடவுளான சிவனைக்குறிக்க 64 சொற் களும் உள்ளன. ஆனால், சதுரகராதியில் கத்தோலிக்க மற்றும் இந்துக்கடவுள்களைக் குறிக்க 103 சொற்கள் உள்ளன.திவாகரர் சமணர், பெஷ்கி கத்தோலிக்கர். தமிழகராதித் தொகுப்பில் தொடக்கத்தில் ஜீகென்பால்க்கும் பெஷ்கியும் இணைந்துதான் ஈடுபட்டிருந்தனர். முதலாமவர் லூதரன் புரட்டஸ்தாந்து, இரண்டாமவர் கத்தோலிக்கர். கடவுள், கிறித்தவம் தொடர்பான சொற்களைத் திரட்டியபின் தொகுப்பதில் கருத்துவேறுபாடு ஏற்பட்டதனால் இருவரும் பிரிந்து தனித் தனியாகத் தொகுப்பதில் மூழ்கினார்கள். இவ்வாறு தமிழ்மொழி மீதுகொண்ட தமிழால் பெஷ்கி,

ஒருமொழி அகராதி(1), இருமொழி அகராதி(2),பன்மொழி அகராதி(1) என அகராதி வகைகளில் நான்கு அகராதிகளைத் தொகுத்து தமிழ்அகராதியியலில் முதல்இடத்தில் அழியாஇடம் கொண்டுள்ளார்.

**மொழி அகராதிகள்**

**ஒருமொழி அகராதி** | **இருமொழி அகராதி** | **பன்மொழி அகராதி**

தமிழ் - தமிழ் : சதுரகராதி | தமிழ் - இலத்தீன், தமிழ் -பிரெஞ்சு | போர்த்துக்கேயம்-இலத்தீன்-தமிழ்

### 🕮 தமிழ் - தமிழ் : சதுரகராதி Thesaurus linguae Tamulicae

தமிழகராதி வரலாற்றில் முதல் ஒருமொழி அகராதியாக இடம்பிடிப்பது 1732இல் தொகுக்கப்பட்டு,1824இல் வெளியான சதுரகராதி ஆகும். இதன் இலத்தீனிய முழுப்பெயர் **Thesaurus**

**linguae Tamulicae** (ad pleniorum planioremque Scriptorum Tamulinsium Intelligentiam collegit acquatuor in partes digessit) என்பதாகும். **Thesaurus Linguae Tamulicae** என்றால் **தமிழ் மொழிக் களஞ்சியம்/கருவூலம்** என்று பொருள். 16ஆம்நூற்றாண்டில் வெளியான இலத்தீன், ஒரு மொழி அகராதியின் பெயரான,**Latinae Linguae Thesaurus -இலத்தீனிய மொழிக் கருவூலம்** என்பதே சதுரகராதியின் இலத்தீன் பெயருக்கு மூலம். அக்காலப்பகுதியில் ஒருமொழி அகராதிகளுக்கு இவ்வாறு பெயர் வைப்பது அகராதித்தொகுப்பாளர்களால் மரபாகக் கைக்கொள்ளப்பட்டு வந்தது.

**Thesaurus –** கருவூலம் **linguae –** மொழி **Tamulicae–** தமிழ் **Latinae –** இலத்தீன்

**முன்னுரையின் சிறுபகுதி...**

*பொதுத்தமிழ் தமிழ் அகராதியைத் தவிர எந்த வார்த்தையையும் இலத்தீனில்,பிரஞ்சில்,போர்த்துக்கேசியத்தில் விளக்கும் பொதுத்தமிழ் அகராதியைத்தவிர- இப்போது வேறொரு அகராதி கொடுக்கிறேன். இதில் முதலாவதாகச் செந்தமிழ் எழுதுவோர் பெரும்பாலும் பயன்படுத்தும் எல்லாச் சொற்களின் பொருள்மயக்கமும் பல்பொருளும் விளக்கமாகும். அடுத்து, ஒரே பொருளுடைய பலசொற்களையும் குறிப்பாகப் பெயர்ச்சொற்களையும், ஒவ்வொன்றின் சிறுவிளக்கத் த்தையும், அதே ஆசிரியர்கள் பயன்படுத்தும் முறையில், விளக்குகிறேன். மேலும், இந்தமொழியில் பல (செய்திகள்) தொகையாகக் கூறப்படுகின்றன. எ-கா- இருநலம்,மூவுலகம்,நாவரண், ஐம்புலன்கள், அறுசுவை,எழுகடல்,எண்மலை என்பன போன்ற மிகப் பலஆங்காங்கே ஆசிரியர்களின் நூல்களில் காணக்கிடைக்கின்றன.இவற்றின் விளக்கத்தை மூன்றாவது பகுதியில் காணலாம். இறுதியாகக் கவிதைக்குப் பயன்படும் வார்த்தைகளை முதல் எழுத்தால் மட்டும் வேறுபட்டு, அசையால் ஒலியால் ஒத்திருக்கும் வார்த்தைகளை ஒன்றாகச் சேர்த்துத் தருகின்றேன்.*

*எனவே, இத்தொகுப்பை மொழிக் களஞ்சியம் என்று அழைப்பதில் மகிழ்ச்சியடைகிறேன். இச்சொற்கள் எல்லாம் தமிழ் நெடுங்கணக்கு முறைப்படி அமைக்கப்பட்டிருப்பதால், நூல் நான்கு பகுதியில் அடங்கியிருப்பதால் இந்நூலுக்குத் தமிழில் சதுரகராதி என்று பெயரிட்டிருக்கின்றேன். இந்நாட்டு மக்களுக்குப் பயன்படும் வகையில் தமிழ்ச்சொற்களைத் தமிழிலேயே விளக்கியுள்ளேன். ...*

பெயர்,பொருள்,தொகை,தொடை எனும் நான்கு பிரிவுகளில் சொற்களை அகரவரிசைப் படுத்தித் தமிழ்நெடுங்கணக்கு முறைப்படி அமைக்கப்பட்டதால் இதற்குச் சதுர் அகராதி என்ற பெயர் வைக்கப்பட்டது.சதுரகராதியில்தான் முதன்முதல் தலைச்சொற்களுக்கான இலக்கணப் பண்புகள்-வினைச்சொல்,வினைமுற்று,வினையெச்சம், வியங்கோண்முற்று போன்ற வினைப் பகுதிகள் பெயரகராதி, தொடையகராதிகளில் புதுமுகம் செய்யப்பட்டன.

- **பெயரகராதி : ஒருசொல் பல பெயர் அகராதி –12,187 சொற்கள்**

  *ஐ –அரசன்,அழகு,ஆசான்,இரண்டனுருபு(உ-ம்:அறத்தைச்செய்தான்,இருமல்,ஓரெழுத்து, கடவுள்,கோழை,சாரியை,(உ-ம்:ஏற்றினோடேற்றை),சுவாமி,நுண்மை,யானைப்பாகன்,தட்டுமோசை*

- **பொருளகராதி : ஒருபொருள் பல சொல் அகராதி – 2,168 சொற்கள்**
  வண்டி – ஊர்தி,ஒழுகை,சகடம்,சகடு,சகடை,சாகாடு,சாடு,பண்டி,வையம்,அன்றியும் பாண்டில் பூண்ட ஊர்தி சகடம், சிவிகை,

- **தொகையகராதி : தொகைப்பெயர்களை உள்ளடக்கிய அகராதி – 298 சொற்கள்**
  அக்கினி – 5 : இராகம், கோபம், காமம், சடம், தீபனம்

- **தொடையகராதி : எதுகைச்சொற்களைக் கொண்ட அகராதி**
  அகரம் - பார்ப்பனச்சேரி,மருதநிலத்தூர்,முதலெழுத்து
  இகரம் - ஓரெழுத்து, சந்தம்
  ஒகரம் - ஓரெழுத்து, மயில்

**சொல்** எனும் பெயர்ச்சொல்லுக்கு 42 பொருள்களையும்,**சொல்லுதல்** எனும் வினைச் சொல்லுக்கு 51பொருள்களையும் சதுரகராதி தருகின்றது. தொகையகராதியும்,

,தொடையகராதியும் இவ்வகராதியின் சிறப்புக்கூறுகள் ஆகும். தொகையகராதியில் தொகைப்பொருட்கள் விளக்கப்பட்டுள்ளன. இவற்றில் இசை-7,இராகத்தொகுதி-7, அங்கயோகம்-8,அளவை-8,அறம்-32, ஆயகலைகள்-64,சிற்றிலக்கியங்கள்-96 முதலானவை இலக்கண விளக்கத்துடன் விளக்கப் பட்டுள்ளன.

தொடையகராதியில்,அகம்-இகம்- உகம். ஊற்றம்-ஏற்றம்-கூற்றம் என்பனவும், முதலெழுத்துத் தவிர மற்ற எழுத்துகள் எல்லாம் ஒத்துவந்து, செய்யுள்களுக்குப் பயன்படக்கூடிய எதுகைத் தொடைச்சொற்கள் அகரவரிசையில் பொருள் விளக்கப்பட்டுள்ளன. சதுரகராதி அடிகளாரின் தமிழ்ப்புலமையைத் தெளிவுறுத்துவதோடு,அவர்தம் நீண்டகால உழைப்பின் பயனாக இந்நூல் தொகுக்கப்பட்டிருப்பதையும் உணர்த்தக்கூடியதாக இருக்கிறது.





தமிழ் - இலத்தீன் பேச்சுமொழி அகராதி      தமிழ் - பிரெஞ்சு அகராதி

**📖 தமிழ் - இலத்தீன் பேச்சுமொழி அகராதி Vulgaris Tamulicae linguae dictionarium Tamulico - Latinum**

இவ்வகராதியில் தமிழ்ச்சொற்களை அகரவரிசையில் தொகுத்து அவற்றிற்குரிய பொருள் இலத்தீன்மொழியில் கொடுக்கப்பட்டுள்ளது.இவ்வகராதியில் 9000 சொற்களுள் பேச்சுத்தமிழ்ச் சொற்கள் திரட்டப்பட்டுள்ளன. இதில் மரபுத்தொடர்களுக்கும்,பழமொழிகளுக்கும் விளக்கம் தரப்பட்டுள்ளன. .மருத்துவத்துறையில் அடிகளுக்கிருந்த புலமை, காய்ச்சல் என்பதற்கு 12 வகையான காய்ச்சல்களைக் குறிப்பிடுவதன் *மூலம்* புலப்படுகின்றது. 1742இல் தொகுக்கப்பட்டது.

**📖 போர்த்துக்கேயம் - இலத்தீன் - தமிழ் அகராதி Vulgaris Tamulicae linguae dictionarium in qua Lustianis vocibus Latine**

இம்மும்மொழி அகராதியில் போர்த்துக்கேயச் சொற்களை அகரவரிசையில் அமைத்து, இலத்தீன், தமிழ் மொழிகளில் பொருள் தரப்படுகின்றது.இச்சிற்றகராதி 4000 சொற்கள் கொண்டது. 1742இல் தொகுக்கப்பட்டது.

**📖 தமிழ் - பிரெஞ்சு அகராதி Dictionnaire tamoul – françois**

இவ்விருமொழி அகராதியில் சாதாரண தமிழ்ச்சொற்களை அகரவரிசையில் அமைத்து,பிரெஞ்சு மொழியில் பொருள் தரப்படுகின்றது. 1744இல் தொகுக்கப்பட்டது. இந்த *அகராதியில்*

Dieu(கடவுள்)என்பதற்கு ,கத்தோலிக்கத்திற்கேற்ப உருவாக்கப்பட்டபுதுச்சொற்கள்:

*Dieu-சறுவேசுரன்,சர்வேஸ்வரன்,சுவாமி, தேவன், தேவாதி, நன்மை, பராபரவஸ்து, பொருள், வஸ்து...*

இத்தாலியில் கொன்ஸ்ரான்ரைன் எனப்பிறந்தவர், தமிழ்நாட்டில் **04.02.1747**இல் வீரமா முனிவராக மறைந்தார்.1680இல் பிறந்த அடிகளாருக்கு மூன்றாம் நூற்றாண்டு பிறப்புவிழா 1980 இல் காஸ்திலியோனேவில் கொண்டாடி, வீரமாமுனிவருக்கு **Il Dante della lingua Tamil-தமிழ் மொழியின் தாந்தே** என்னும் பட்டச்சான்றிதழ் அளித்து பெருமைப்படுத்தினர் ஊர்மக்கள்.

வீரராரியன் பிறந்தநாளே தமிழ் அகராதியியல் தினமாகக் கொண்டாடப்படுகின்றது. இவர் பிறந்தநாளான **நவம்பர் 08** ஐ தமிழ் அகராதியியல் தினமாகக் கொண்டாடப்படுவதற்கு 2015இல் பாரிசில் இடம்பெற்ற முதலாவது ஐரோப்பியத் தமிழ் ஆய்வியல் மாநாட்டில்,தமிழ்நாடு அரசிடம் கோரிக்கையை முன்வைத்தவர் இக்கட்டுரையாளர் என்பது சுட்டத்தக்கது.



Costanzo Beschi



வீரமாமுனிவர்




Il Dante della lingua Tamil

# TAMIL DICTIONARIES IN RUSSIA


## Alexander Dubyanskiy



Moscow State University, Institute of Asian and African Countries


Dravidian languages were mentioned for the first time in Russia in the edition of "A comparative Dictionary of all languages and their branches" (1786-1789) prepared by members of Russian Academy of Sciences Peter Simon Pallas and Feodor Yankovich de Mirievo. The dictionary was composed by a decree and under the patronage of Russian Empress Ekaterina the Second. It contains 130. Dravidian words from four languages: Tamil (54 words), Malayalam (24), Kannada (24), Telugu (28). As Russian scholar Nikita Gurov observes: in spite of its imperfection and fragmentary character, the Dravidian glossary represents the first attempt of the linguistic comparison of the languages of South India and in this respect it has no analogue in scientific literature of that time". The main sources for the glossary were records of travelers, missioners, military officers who happened to visit India or to work there.

The next step in preparing dictionaries of Dravidian languages was made in the Soviet Union in the XX-th century. It is known that in the 50-th Nikita Khrustchev, the Soviet leader at that time proclaimed the course of openness in the international affairs. To develop the ties with foreign countries, in particular with Eastern states, including India. A special program was started which consisted of organizing studies of Indian languages, radio-transmitting, publishing books in Indian languages and making dictionaries. At that period several Soviet scholars began to study Tamil under the guidance of Purnam Somasundaram, a learned Tamilian who also worked in Tamil section of the Radio Moscow and in the publishing house "Progress" as a translator and editor. It was he who helped to compile the Tamil-Russian dictionary and who was its editor. The compilers were Alexander Piatigorskiy and Semion Rudin. The dictionary was published in Moscow in 1960 in 3500 copies. It contains about 3800 words. The compilers used some Tamil-English sources (like Madras University Tamil Lexicon, J.P. Fabricius' dictionary and others) and oriented the dictionary on a standart literary Tamil. The conversational and idiomatic levels of Tamil language are represented on lesser scale. But the lexical stock of the dictionary is good enough for dealing with modern newspapers and magazines, literary pieces and even classical Tamil poetry. A short essay on Tamil grammar written by Mikhail Andronov, is appended to the dictionary.

In 1965 a Russian-Tamil dictionary (rushya-tamil akarāti) was published (24 000 words) and its second edition (revised and supplemented) came out in 1989 (25 000 words). The compilers were Mikhail Andronov, Alev Ibragimov, Nina Yu ganova and Eugene Konovalov. The editors - Purnam Somasundaram and Eugene Konovalov. An essay on Russian grammar, written by Mikhail Andronov, was attached to the dictionary.

One more Russian-Tamil dictionary should be mentioned here. It is based on the pattern worked out by Russian scholars for foreign students studying Russian. That is why it is called rushya-tamil ārampa akarāti (māsko, 1987). It contains 2100 words and expressions of practical importance in their main meanings. A lexical entry comprises phonetic reading of the word (its pronunciation), signs of accentuation, the grammatical category of the word and the word's translation into Tamil (with some useful expressions). In some cases a picture added. There is a supplement in the end of the dictionary in which several tables of Russian grammar forms are demonstrated (the table of grammatical cases first of all). The authors of the dictionary are: E. Kedaitene, R. Baskaran, V. Mitrokhina.

நன்றி : தமிழ் அகராதியியலின் பரிணாமம் மற்றும் பரிமாணம்

# நகை





முனைவர் **மு.கண்ணன்**
மேனாள் பதிப்பாசிரியர்,
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககம்,
சென்னை.

"நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி யுவகை யென்று
அப்பா லெட்டே மெய்ப்பா டென்ப"
(தொல். மெய்ப்.3)

மாந்தனிடம் தோன்றும் எண்வகை மெய்ப்பாடுகளை இப்படி வரிசைப்படுத்தியிருக்கிறார் ஒல்காப்புகழ்த் தொல்காப்பியனார்.

"நகை என்பது சிரிப்பு
அது,
முறுவலித்து நகுதலும், அளவே சிரித்தலும்
பெருகச் சிரித்த லுமென மூன்றுவகை"
என்பது பேராசிரியம்.

தனது 48 ஆம் அகவையில் இறையடியில் இணைந்த (10.04.1931) லெபனான் நாட்டு இலக்கிய மேதையான கலீல் சிப்ரான்,

"புன்னகை செய்
உன் கவலையால்
உலகம் மாறிவிடப் போவதில்லை"
என்கிறார்.

தனக்கென மகிழ்ச்சியை உருவாக்கிக் கொள்ளாதவர்களால் மற்றவர்களுக்கான மகிழ்ச்சியை உருவாக்க முடியாது என்பது மேலை நாட்டாரின் கூற்று.

செல்வத்தைவிட மதிப்பு மிக்கது மகிழ்ச்சி.

ஏனெனில், அதனை யாரும் கடன்தர முடியாது.

"எள்ள லிளமை பேதைமை மடனென்று
உள்ளப்பட்ட நகை நான்கென்ப" (தொல். மெய்ப்.4)

எள்ளல் என்பது தான் பிறரை எள்ளிநகுதலும்

பிறரால் எள்ளப்பட்ட வழித் தான் நகுதலும் என இரண்டு.

பேதமை என்பது அறிவின்மை

மடமை என்பது பெரும்பான்மையும் "கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை"

இவையும் தன் மடமையான் நகுதலும் பிறன் மடமையான் நகுதலும் என இரண்டாம்.

உள்ளப்பட்ட நகை நான்கென்றதனால் உள்ளத்தொடு பிறவாத நகையும் உள.

நகைச்சுவை என்பது மக்களுக்கென்றே உண்டான அரிய சுவையாகும். ஏனைய பிறவிகளுக்கு உணரும் வாய்ப்பில்லை. நகைச்சுவையைத் துய்த்துப் பயனடையா மக்கள், மாக்களின் பாற்படுவர். மனத்தில் மகிழ்ச்சியும் முகத்தில் நகைப்பும் தோன்ற வேண்டும். மனம் மகிழாமல் முகத்தில் தோன்றும் நகைச்சுவையைப் 'பச்சைச் சிரிப்பு' என்பர்.

சிரித்து மகிழ்தலாகிய நகைச்சுவையை ஒருவர் தனித்திருந்து துய்க்க இயலாது. ஒருவர் தனியாக இருந்து கொண்டு தானாகச் சிரித்து மகிழ முடியாது.

சிரித்து மகிழ பலர் கூடியிருக்க வேண்டும். குறைந்தது இருவராவது வேண்டும். தன்னந் தனியே சிரித்துக் கொண்டிருப்பார் மகிழ்ச்சியாய்ச் சிரிப்பவரல்லர்; மனநோயர்.

அழுவதற்கு ஒருவரே போதும், சிரிப்பதற்கு இருவராவது வேண்டும் என்பது உலக இலக்கணம்.

சிரித்து மகிழ்தலாகிய நகைச்சுவைக்கு முகத்தைத் தவிர வேறெந்த உறுப்பும் காரணமாவதில்லை. அதனாற்றான் மேலான உறுப்புகளைத் தன்னகத்தே கொண்டுள்ள முகத்தை உடம்புக்கே சிறப்பான பகுதி என்றழைக்கிறோம்.

எனவே, சிரித்து மகிழ முகமே இலக்கணமானது மட்டுமன்று இடமுமாயிற்று என்பர். ஏனெனில், மனத்தில் தோன்றும் எந்த உணர்ச்சியையும் முகம் தான் வெளிப்படுத்தும். முகத்தை மூடிக்கொண்டு மற்ற பகுதிகளைக் காட்டினால் அவை அவருடைய மன உணர்ச்சியைக் காட்டா. முகம் தான் உணர்ச்சியை வெளிக்காட்டும்.

அதனால் தான் நகைச்சுவையைப் பற்றி பேசுமிடங்களிலெல்லாம் திருவள்ளுவப் பேராசான் முகம் நகுதல் என்றே சுட்டுகிறார்.

"முகத்தின் முதுக்குறைந்தது உண்டோ உவப்பினும்
காயினும் தான்முந் துறும்" (குறள். 707)
என்பது வள்ளுவர் வாய்மொழி.

நகை என்றது புன்முறுவலை; முறுவல் என்பது சிறுநகை,

இது நல் என்றும் வேரடியிலிருந்து பிறந்தசொல்.

**நல்** – **நகு** – **நகை** என்றாகும்

**நல்** – **நல்ல** – **நன்று** – **நன்றி** என்றும் வரும்

**நல்** – **நடு** – **நடுக்கம்** – **நடை** – நடிப்பு என்றும் வரும்.

நகை என்னும் சிரிப்புப் பொருள். அழகு என்றும் பொருளுக்குத் தாவும். நகைத்தாலும் அழகு; நகையணிந்தாலும் அழகு.

நகையை அணிய வேண்டும். நகையை அணிவதால் அது அணி என்றும் மாறும். எதையெதை எங்கெங்கே அணிய வேண்டும் என்னும் வகைப்பாடுள்ளது. அந்த வகைப்பாடு அறிந்து நகையை அணிவதால் நகை அணியாகும்.

அணி = அழகு

அணி = ஒழுங்கு, வகுப்பு, பிரிப்பு

அணி + வகுப்பு = அணிவகுப்பு என்றாகும்.

நல் – நடு என்றாகும் போது நடுவிலிருப்பது நல்லது என்றாகும். நல்லதை நன்று என்பர். நன்று செய்தாருக்கு நன்றி கூறுவர்.

**நல்** – **நட்பு** என்றாகும்

நல்லாருடன் கூடுவதே நட்பு.

எனவே நல் என்னும் வேரடியிலிருந்து நகை, நன்று, நன்றி, நட்பு என்று சொற்கள் வளரும். அணி, அணிகலன், அணிவகுப்பு என்று பொருள் பிரிந்து சொல் பிறக்கும்.

## பாவாணர் பக்கம்:

# பொருள்திரி சொற்கள்

( சென்ற இதழின் தொடர்ச்சி)

**பொது**

சில சொற்களின் பொருள்கள், உயர்படையாமலும் இழிபடையாமலும் பொது முறையாகத் திரிந்துள்ளன.

பள்ளி என்பது, முதலாவது படுக்கையை யுணர்த்தும் சொல். 'பள்ளிகொள்ளுதல்', 'பள்ளிகொண்டான்', 'பள்ளியெழுச்சி' முதலிய வழக்குகளை நோக்குக. பள்ளி என்பது, கீழிடத்தை அல்லது தாழிடத்தை யுணர்த்தும் பள் என்னும் வேரினின்று பிறந்ததாகும்.

பள் + அம் = பள்ளம். பள்– படு. படுத்தல் கீழே கிடத்தல்.

படுக்கையையுடைய கலமும் அறையும் வீடும் தானியாகு பெயர் என்னும் இடனாகுபெயராய்ப் பள்ளி எனப்படும். படுக்கும் அறையைப் பள்ளியறை யென்பர்.

இரப்போரும் துறவிகளும் வழிப்போக்கரும் திக்கிலிகளும் பள்ளிகொள்வதற்கென்று, அதாவது படுப்பதற்கென்று ஏற்பட்ட மடமும் பள்ளி எனப்படும்.

கல்விச்சாலைகள் பெரும்பாலும் மடங்களிலிருந்து வந்தமையால் பள்ளி என்னும் சொல் கல்விச் சாலையையுங் குறித்தது. 'பள்ளிக்கூடம்', 'பள்ளிப்பிள்ளை', 'பள்ளிக்கு வைத்தல்' முதலியன உலக வழக்கு. எழுத்துப்பள்ளி என்பது மலையாள (சேர) நாட்டு வழக்கு.



மடங்கள் பெரும்பாலும் கோவில்களைச் சேர்ந்திருந்தமையாலும், அங்ஙனம் சேராத மடங்களுள்ளும் கோவில் இருந்தமையாலும், கோவில் கடவுள் வீடாதலாலும், பள்ளி என்னும் சொல் கோயிலையுங் குறிக்கும்.

சமணப் புத்தமதக் கோவில்கள் மடத்தோடு சேர்ந்திருந்தமையாலேயே, பொதுவாய்ப் பள்ளியெனப் பட்டன. மசூதிகளும் மடம் போன்றவை என்னுங் காரணத்தால் பள்ளிவாசல் எனப்படும்.

"கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல்" *(குறள். 844)*

என்னுங் குறட்கு, 'சான்றோரவையின்கண் பேதையாயினான் புகுதல், தூயவல்ல மிதித்த காலை இன்பந்தரும் அமளிக்கண்ணே வைத்தாற் போலும்.

"கழுவாக்கால்' என்பது இடக்கரடக்கு; அதனால் அவ் வமளியும் இழிக்கப்படுமாறுபோல, இவனால் அவ்வவையும் இழிக்கப்படும் என்பதாம்'' என்று உரைகூறினார் பரிமேலழகர்.

சான்றோர் அவை திருமுன்னிலை போலத் தெய்வத் தன்மை யுடையதாய்க் கருதப்படுவதால், பள்ளி என்பதற்குப் படுக்கை என்று பொருள் கொள்ளாமல் கோவில் என்று பொருள் கொள்வதே பொருத்தமாம்.

படுக்கும் வீடே ஒருவனுக்கு நிலையான இடமாதலால் பள்ளி என்பது நிலையான இடத்தைக் குறித்துப் பின்பு அக்கருத்தை அடிப்படையாகக் கொண்டு இடத்திற்கே பொதுப் பெயராயிற்று.

"எல்லா எழுத்தும் வெளிப்படக் கிளந்து
சொல்லிய பள்ளி எழுதரு வளியின்"

என்று தொல்காப்பியர் கூறுதல் காண்க. *(பிறப்பியல், 20)*

துரை என்பது, துர என்னும் பகுதியடியாகப் பிறந்து, தலைவன் அல்லது சிற்றரசன் என்று பொருள்படும் கொடுந்தமிழ்ச்சொல். துரத்தல் செலுத்துதல் அல்லது நடத்துதல். மேனாடுகளிலிருந்து இங்கு முதன்முதல் வந்தவர்கள் தலைவராகவும் அரசியலை மேற்கொண்டவராகவு மிருந்ததினால், அவர்கட்குத் துரை என்பது பொதுப் பெயராக வழங்கத் தலைப்பட்டது.

பெண்மை அல்லது பெண்டிரைக் குறிக்கும் மாதர் என்னும் சொல், காதற்பொருளைத் தருவதற்குக் காரணம், பெண்டிரின் காதலிக்கப்படும் தன்மையாகும்.

''மாதர் காதல்'' என்பது தொல்காப்பியம். (உரியியல், 30)

சேவகன் (வ.) என்னும் பெயர், 'ஊழியன்', 'ஏவலன்', 'மறவன்' முதலிய பொருள்களைத் தரும். ஊழியனும் ஏவலனும் மறவராயிருந்தால்தான் உண்மையாகவும் சிறப்பாகவும் ஊழியஞ் செய்ய முடியும். பண்டைக்காலத்தில் ஏவலர் இளையர் எனப் பட்டதும், அவர் இளமையோடு கூடிய மறமும் வலியும் உடையராயிருந்தமை பற்றியே.

வண்ணம் என்பது நிறம். அது நிறம் போன்ற வகையையும், செய்யுளின் ஓசை வகையையும், ஓசையிற் சிறந்த செய்யுள் அல்லது பாட்டையும் குறித்தது. அவ்வண்ணம் இவ்வண்ணம் என்பன வகையையும், நெடுஞ்சீர் வண்ணம் குறுஞ்சீர்வண்ணம் என்பன ஓசை வகையையும், வண்ணகவொத்தாழிசைக்கலி, நாட்டைவண்ணம் என்பன செய்யுள் அல்லது பாட்டையும் குறித்தல் காண்க. வண்ணத்தை வர்ணம் என்பர் வடமொழியார்.

வெள்ளை நிறமானது தெளிவாகவும் களங்கமற்றுமிருப்பதால் வெள்ளை என்னும் சொல் தெளிவையும் களங்கமின்மையையும் குறிக்கும். எளிய நடையை வெள்ளை நடை என்பர்.

சூதுவாதற்றவனை வெள்ளை என்றும் வெள்ளந்தி என்றும் அழைப்பர். "வெள்ளைக் கில்லை கள்ளச் சிந்தை" என்றார் ஔவையாரும். குற்றமற்ற பாவகை வெள்ளை எனப்பட்டது. வெள்ளையான பா வெண்பா.

பக்குவம் செய்யப்படாத மூலிகை பச்சையாயிருப்பதால், பச்சை என்னும் சொல், பக்குவம் செய்யப்படாத அதாவது அடக்கிச் சொல்லப்படாத இடக்கரைக் குறிக்கும். 'பச்சைப் பேச்சு', 'பச்சை பச்சையாய்ப் பேசுதல்' என்பன உலக வழக்கு.

எளியாரிடத்தும் வலியாரிடத்தும் ஒப்ப நின்று ஒறுக்கும் தன்மைபற்றி தெய்வச் சான்றாகக் கொள்ளப்படுவது நெருப்பு. அதன் நிறம் செம்மை. அதனால் செம்மை என்னும் சொல் நேர்மையை உணர்த்தும்.

திணை என்பது, திரட்சியைக் குறிக்கும் திண்ணை என்னுஞ் சொல்லின் தொகுத்தல் திரிபு (விகாரம்). அது முறையே, திரண்ட குழுவையும், பெருங் குழுவான குலத்தையும், குலத்திற்குச் சிறந்த ஒழுக்கத்தையும், குலம் போன்ற பாகுபாட்டையும், ஐவகை மரபினர் வசித்த நிலவகையையும் அவற்றின் செய்திகளையும் குறிப்பதாயிற்று.

பழங்காலத்தில், ஒருவர் இன்னொருவருக்குக் கொடுக்குங் கொடையை உறுதிப்படுத்துவதற்கு, கொடுப்பார் கொள்வார் கையில் நீரை வார்ப்பது வழக்கம். இதற்குத் தாரைவார்த்தல் என்று பெயர்.

இத்தொடர் வடார்க்காட்டு வழக்கில் ஒருவன் ஒரு பொருளைத் தொலைத்துவிடுவது, அதைக் கொடுத்துவிடுவதுபோலிருத்தலால், அதுவுங் கொடை சொல்லாற் குறிக்கப்பட்டதென்க.

### வரையறுப்பு (Restriction)

பல பொருட்குப் பொதுவான சொல்லை அவற்றுள்ள ஒரே பொருளில் வழங்குதல் வரையறுப்பாகும்.

பிள்ளை என்னும் பொதுப்பெயரை வேளாளர்க்கு மட்டும் குலப்பட்டமாக வழங்குவதும், ஆண்பிள்ளையை அல்லது பெண்பிள்ளையை மட்டும் குறிக்க ஆள்வதும், 'கறி' என்னும் பொதுச் சொல்லால் ஊன்கறியை மட்டும் உணர்த்துவதும்; குட்டி என்னும் இளமைப் பெயரை ஆடும் மக்களுமாகிய ஈரினத்திற்குமட்டும் சிறப்பாய்ப் பயன்படுத்துவதும்; வரையறுப்பிற் கெடுத்துக்காட்டாம்.

யாம் நாம் என்னும் இரு பன்மைப் பெயர்களுள், முன்னதைத் தனித்தன்மைக்கும் பின்னதை உளப்பாட்டுத் தன்மைக்கும், வகுத்துக் கொண்டதும் ஒருவகை வரையறுப்பே. சில பொதுச் சொற்கள் ஆள்வான் கருத்தின்படி உயர்ந்த பொருளையோ தாழ்ந்த பொருளையோ மட்டும் குறிக்கும். குலமகன், குலமகள் என்னும் தொடர்களின் முதற் சொல் உயர்குலத்தையே குறித்தல் காண்க.

சில பொதுச் சொற்கள், நற்பொருள் தீப்பொருள் ஆகிய இரண்டில் ஒன்றைமட்டும் உணர்த்தும். ஒழுக்கம் செய்கை குணம் மணம் என்பன நற்பொருளிலும், கருமம் காரியம் வினை நாற்றம் வீச்சம் என்பன தீப்பொருளிலும் உலக வழக்கில் வழங்கும்.

கருமம் என்று பழந்தீவினையையும் வினை என்று பிறப்பிற்கேதுவான செயலையும், 'காரியம்' என்று கருமாந்தரத்தையும் குறிப்பர். நாற்றம் என்பது செய்யுள் வழக்கில் நற்பொருளுணர்த்தும்.

*"நாற்றமும் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும்" (களவியல்,)*

என்றார் தொல்காப்பியர்.

***நாற்றம் உரைக்கும் மலருண்மை" (நான்மணிக் 47)***

**என்றார் விளம்பிநாகனார்.**

இழைத்தல் என்னும் வினை, பொதுவாய்த் தீமை செய்தலையே குறிக்கும்.

### விரிப்பு (Extension)

ஒரு பொருட்குச் சிறப்பான சொல்லை, அதற்கினமான பிறபொருட்கும் வழங்குவது விரிப்பாம்.

கைம்மை நோன்பு நோற்றவளை மட்டும் குறிக்க வேண்டிய கைம்பெண்(கைம்பெண்டு, கைம்பெண்டாட்டி) என்னும் பெயர், இன்று கணவனையிழந்த பெண்டிர் எல்லார்க்கும் பொதுப்பெயராய் வழங்குகின்றது.

பொன் என்பது பலவகைத் தாதுக்களையும் பொதுவாகச் சுட்டுவதும், செம்பு என்பது பலவகைத் தாதுக்களாலும் செய்யப்படும் ஒருவகைக் கலத்தைக் குறிப்பதும், தோடு என்பது ஓலையாற் செய்யப்பட்ட காதணியை மட்டும் குறிக்காது பிற கருவிகளாற் செய்யப்பட்டவற்றையும் குறிப்பதும், புள் என்பது பறவை நிமித்தத்தை மட்டுமன்றிப் பல்வேறு நிமித்தங்களையும் பொதுவாகக் குறிப்பதும் விரிப்பின் வகையாம்.

இரும்பிற்குக் கரும்பொன் என்றும், வெள்ளிக்கு வெண்பொன்

என்றும் பெயர்.

***"தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று"***

*(குறள். 931)*

என்னுங் குறள்தொடரில், பொன் என்பது இரும்பைக் குறித்தது. வாய்ச்சொல்லாற் குறிக்கப்படும் குறியை வாய்ப்புள் என்பர்.

# சங்க இலக்கியத்தில் அசுணம்


## முனைவர் பி. பாலசுப்பிரமணியன்

தமிழ்த்துறைத் தலைவர் (சுயநிதிப் பிரிவு)
தூய நெஞ்சக் கல்லூரி (தன்னாட்சி)
திருப்பத்தூர், திருப்பத்தூர் மாவட்டம் 635201.


"எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே"[1] என்ற தொல்காப்பியர் கூற்றுப்படி தமிழில் பயன்பாட்டில் இருக்கக்கூடிய அனைத்துச் சொற்களும் பொருளுடையவைகளாகும்.

பொருளில்லாத சொற்கள் என்று எவற்றையும் ஒதுக்கித் தள்ளிவிட முடியாது. தமிழிலக்கிய, இலக்கணங்களில் சொற்கள் குவிந்து கிடக்கின்றன. அந்தந்தக் காலத்திற்கேற்றவாறு சொற்கள் பயன்பாட்டில் இருந்தமையையும் அறிய முடிகிறது. செய்யுள் வழக்குச் சொற்கள், பேச்சு வழக்குச் சொற்கள் எனச் சொற்களைப் பிரித்துப் பார்க்கிறோம்.

இந்தச் சொற்களை மையமாகக் கொண்டுதான் இலக்கியங்களையும் இலக்கணங்களையும் உருவாக்கியிருக்க வேண்டும். குறிப்பாக, சங்க இலக்கியத்தில் பயன்படுத்தப்பட்டுள்ள சொற்கள் அவ்வக்கால வழக்கில் இருந்த சொற்களாகும்.

கால மாற்றத்தால் பல சொற்கள் வழக்கிழந்தன. இன்றைய காலகட்டத்திற்கு அச்சொற்களையும் சொற்கள் உணர்த்தும் பொருளையும் நினைவுபடுத்தவேண்டிய தேவையிருக்கிறது. அதனடிப்படையில் 'அசுணம்' என்ற சொல்லின் பொருளை விளக்கும் நோக்கில் கட்டுரை அமைகிறது.

### அசுணம் பதிவுகள்

நற்றிணையில் 244, 304 ஆகிய இரண்டு பாடல்களிலும் அகநானூற்றில் 88ஆம் பாடலிலும் அசுணம் என்ற சொல் நேரடியாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது எனச் சங்க இலக்கியச் சொல்லடைவை உருவாக்கிய பெ.மாதையனும் சங்க இலக்கியச் சொற்றொகை (A word Index for Cankam Literature) உருவாக்கிய தாமஸ் லெமனும் தாமஸ் மால்டரும் கூறியுள்ளனர்.

மூன்று பாடல்களில் மட்டுமே அசுணம் என்ற சொல் இடம்பெற்றுள்ளது என்பது இவர்களின் கருத்து.

மேலும் கலித்தொகை 143 ஆம் பாடலில் 'மானை' என்ற சொல் பதிவு செய்யப்பட்டுள்ளது. உரையாசிரியர் நச்சினார்க்கினியர் மான் என்பதை அசுணமா எனக் குறிப்பிடுகின்றார்.

இவரைப் பின்பற்றியே பிற்கால உரையாசிரியர்களும் பதிவு செய்திருப்பது ஆய்வுக்குரியதாகும். ஆக, அசுணம் என்ற சொல் நேரடியாக இடம்பெற்றுள்ள பாடல்கள் 3 மட்டுமே. வேறு பாடல்களில் 'மான்' என்பது அசுணமா என்று உரையாசிரியர்களால் பயன்படுத்தப்பட்டிருக்கிறதா? என ஆராய வேண்டும்.

### நற்றிணை

அசுணம் என்பது ஓர் உயிரினம். ஆனால் அது பறவையா? விலங்கா? என்பதில் உரையாசிரியர்களுக்கிடையே பல்வேறு கருத்துநிலைகள் உண்டு. நற்றிணையில் இரணடு பாடல்கள் அசுணம் பற்றி பேசுகின்றன.

"விழுந்த கூதளத்து அலறிநாறும்
மாதர் வண்டின் நயவரும் தீம்குரல்
மணம் நாறு சிலம்பின் அசுணம் ஓர்க்கும்
உயர்மலை நாடற்கு உரைத்தல் ஒன்றோ"[2]

என்ற பாடலில் (கூற்றங்குமரனாரின் குறிஞ்சி நிலப்பாடல்) 'அசுணம்' இடம்பெற்றுள்ளது. மழை பெய்து ஓய்ந்த பின் குளிர்ச்சியான சாரல் பொழியும் கூதிர்க் காலத்தில் 'கூதளம்' மலரும். கூதளத்தில் தேனருந்தி மணம் வீசும் வண்டின் இசை, கேட்பதற்கு இனிமையாக இருக்கும். வண்டினிசையை யாழோசை எனக் கருதி, மணம் வீசும் மலைப்பிளவில் தங்கியிருக்கும் 'அசுணப் பறவை' செவிகொடுத்துக் கேட்கும் என்று இப்பாடல் பதிவிடுகிறது.

### இப்பாடலின் உரைவிளக்கம்,

'இசையைக் கேட்டு மகிழும் இயல்புடைய பறவை; கொடூரமான இசையைக் கேட்டால் உயிர்விடும் என்பர். இதனை விலங்கு என்றும் கூறுவர்'[3] என்று குறிப்பிடுகிறது.

உரையாசிரியர், 'கூதள மலரில் தேனுண்ட அதன் மணத்தையுடைய வண்டின் இசையை, யாழிசை என்று அசுணம் செவி கொடுத்துக் கேட்டு ஆராயும் என்றது தலைவனுடன் முயங்கியதால் தலைவி கொண்ட வேறுபாட்டைக் காணும் தாய், முருகணங்கியதால் வந்த வேறுபாடு என்று ஆராயும் என்பதனை உள்ளுறுத்தி நின்றது'[4] என்கிறார்.

**பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர்,**

'விருப்பமுறும் இனிய ஓசையை யாழோசை போலுமென்று மலைமுழையிலிருக்கின்ற அசுணமாகிய விலங்கு செவி கொடுத்துக் கேளாநிற்கும்'[5] என்று எழுதுகிறார்.

**"அசுணம் கொல்பவர் கைபோல் நன்றும்**

**இன்பமும் துன்பமும் உடைத்தே**

**தண் கமழ் நறுந்தார் விறலோன் மார்பே"[6]**

என்ற பாடல் மாறோக்கத்து நப்பசலையாரின் குறிஞ்சி நிலப்பாடலாகும். குளிர்ச்சி பொருந்திய நறுமணம் வீசக்கூடிய மாலை அணிந்த, வல்லமையுடைய தலைவனின் மார்பு இன்பமும் துன்பமும் உடையது.

இது அசுணப் பறவையைக் கொல்பவர்களுடைய கையைப் போன்றது என விளக்கமளிக்கப்படு கிறது.

**பாடல் உரை விளக்கம்,**

'தலைவன் தன்னொடு இருப்பின் தன் எழில் பொலியுமென்றும் தலைவன் பிரியின் கெடுமென்றும் கூறுகின்றனள் தலைவி. அசுணப் புள்ளைக் கொல்பவர் முதலில் யாழை இசைத்துப் பின் பறையை முழக்குவர். இன்னா ஓசை கேட்டு அசுணம் மடியும்'[7] என்று குறிப்பிடுகிறது.

**பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்,**

"தண்ணிய தாய்மணங்கமழும் நறிய மாலையணிந்த வலிமையுடைய நம் காதலன் மார்பானது; இசையறி விலங்காகிய அசுண மானைக் கொல்பவருடைய கையைப் போலப் பெரிதும் இன்பமும் துன்பமும் உடையதாயிரா நின்றது"[8] எனக் கூறி, மேலும்

"அசுணங் கொல்பவர் முதலில் யாழை வாசித்துப் பின்பு செவியில் ஏற்க வொண்ணாத பறையை முழக்கி அவற்றைக் கொல்வதனால் இன்பமுந் துன்பமும் உடைமையின் அதனை உவமித்தார்"[9] என்று விளக்கிச் செல்கிறார்.

இங்கு அசுணம் என்பது இசை கேட்கும், கேட்டு ஆராயும் ஒரு வகைப் பறவை, அசுணமானாகிய விலங்கு எனவும் அடையாளப்படுத்தப் படுகிறது. மேலும் அசுணப் பறவையைக் கொல்ல நினைப்பவர்கள் முதலில் யாழிசைத்து மயங்கச் செய்து, பிறகு, பறை முழக்கிக் கொல்வர் என்ற செய்தியை முன்வைக்கிறது.

**அகநானூறு**

அகநானூற்றில் பல உயிரினங்கள் பேசப்பட்டாலும் அசுணம் என்ற ஓர் உயிரினம் ஒரு பாடலில் மட்டுமே பதிவு செய்யப்பட்டிருப்பது வியப்புக்குரியதாகும். ஒருவேளை தொகைப்பாடல்கள் பாடிய காலத்தில் இந்த உயிரினம் அரிதாக வாழ்ந்ததாக இருந்திருக் கலாம்.

**... ... குன்றத்**

**திரும்புவலி தொலைத்த பெருங்கை யானைக்**

**கவுள்மலி பிழிதரும் காமல் கடாவும்**

**இருஞ்சிறைத் தொழுகி யார்ப்ப யாழ்செத்**

**திருங்கல் விடரளை அசுணம் ஓர்க்கும்"[10]**

என்ற பாடல் (ஈழத்துப் பூதந்தேவனார், குறிஞ்சி நிலப்பாடல்) 'அசுணம் ஓர்க்கும்' எனப் பதிவு செய்கிறது.

'குன்றின் கண்ணுள்ள பெரிய புலியைக் கொன்ற பெரிய கையினை உடைய யானையின் கன்னத் திலிருந்து பெருகி வழியும் அழகிய மதநீரில், கரிய சிறகினையுடைய வண்டின் கூட்டம் ஒலிக்க அதனை யாழிசை எனக் கருதி பெரிய மலையின் பிளப்பாய குகையிலுள்ள அசுணங்கள் உற்றுக் கேட்கும்'[11] என்று ந.மு.வேங்கடசாமிநாட்டார், ரா.வேங்கடாசலம்பிள்ளை ஆகிய இருவரும் தங்களது விளக்கவுரையில் குறிப்பிடுவர்.

இங்கும் அசுணம் வண்டின் ஓசையை, யாழிசை எனக் கருதி மயங்கும் என்ற பொருளிலேயே கையாளப்படுகிறது.

அசுணம் என்பதை 'அசுணங்கள்' என்று உரையாசிரியர்கள் பன்மையில் எழுதிச் செல்வதைப் பார்க்க முடிகிறது.

மேற்கண்ட மூன்று பாடல்களும் குறிஞ்சித் திணையைச் சார்ந்தவை. ஆக, அசுணம் என்ற பறவை (அ) விலங்கு குறிஞ்சித் திணைக்குரியதாக அடையாளப்படுத்தப்படுகின்றன.

**கலித்தொகை**

நற்றிணையும் அகநானூறும் அசுணத்தைக் குறிஞ்சி நில உயிரினம் என அடையாளப்படுத்தின. கலித்தொகையில் அசுணம் 143 ஆம் நெய்தற்கலிப் பாடலில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இது சற்று முரணாக உள்ளது.

குறிஞ்சி தவிரப் பிற நிலங்களிலும் அசுணம் பரவி யிருக்க இடமுண்டா? என்று ஆய்வு நிகழ்த்தவும் வாய்ப்பிருக்கிறது.

**"மறையிற்றன் யாழ்கேட்ட மானை யருளா**

**தறைகொன்று மற்றதன் ஆருயி ரெஞ்சப்**

**பறையறைந் தாங்கொருவன் நீத்தான்"[12]**

என்ற பாடலுக்கு (நல்லந்துவன் பாடல்) உரையெழுதிய நச்சினார்க்கினியர்,

'வஞ்சனையாலே தான் வாசித்த யாழிசையைக் கேட்ட அசுணமாவை இவ்வின்ப முற்றதென்று அருள் பண்ணாதே முன்பு செய்த வஞ்சனையைக் கெடுத்துப் பின்னை அதன் அரிய உயிர்போம்படி பறையைத் தட்டினாற்போலே ஒருவன் முன்னர் வஞ்சித்து இன்பத்தை உண்டாக்கிப் பின்னர் அவ்வின்பம் போம்படி என்னைக் கைவிட்டான்'[13] என்று குறிப்பிடுகிறார்.

**உரையாசிரியர் விசுவநாதன்,**

'வஞ்சனையாலே தான்மீட்டிய யாழிசையைக் கேட்ட அசுணமாவை, இவ்வின்பம் உற்றதென்று அருள் செய்யாமல், முன்பு செய்த வஞ்சனையைக் கெடுத்துப் பின்னர் அதன் அரிய உயிர் போகும்படி பறையைத் தட்டினார் போல ஒருவன் முன்னர் வஞ்சித்து, இன்பத்தைத் தந்து பின்னர் அவ்வின்பம் போம்படி என்னைக் கைவிட்டான்'[14] என்று குறிப்பிடுகிறார்.

நச்சினார்க்கினியர் கூறிய அதே விளக்கத்தைப் பொருள் மாறாமல் பிற்கால உரையாசிரியராகிய விசுவநாதனும் பயன்படுத்தியுள்ளார். சில வார்த்தைகளை மட்டுமே மாற்றியுள்ளார். கலித்தொகைப் பாடலும் யாழ், பறை வாசித்து அசுணமாவை வஞ்சனையாகக் கொள்கின்றனர் என்ற கருத்தியலை முன்வைக்கிறது. அருஞ்சொற் பொருள் விளக்கத்திலும் மான் என்பதற்கு அசுணமா என்ற சொல்லைப் பயன்படுத்தியிருப்பதையும் அறிய முடிகிறது. பாடலில் யாழ்கேட்ட மானை என்ற சொல்லும் பறையறைந்து என்ற சொல்லும் இடம்பெற்றிருப்பதால் உரையாசிரியர்கள் அசுணமா என்ற பொருளில் அர்த்தப்படுத்தியிருப்பார்கள் எனக் கருத இடமிருக்கிறது.

'அசுணம் இது பேடையை விட்டு நீங்காத பறவை. இதனிறம், உருவம் முதலியவை நன்றாக விளங்கவில்லை. இதன் ஓசையைத் தலைவனீக்கத்தில் தலைவி பொறாமைக்குத் தமிழ் நூலார் உவமை கூறுவர்'[15] என அபிதான சிந்தாமணியில் ஆ. சிங்காரவேலு முதலியார் குறிப்பிடுவார்.

'அசுணமா, அசுணம் என்பதற்குக் கேகயப்புள்'[16] எனப் பொருள் விளக்கம் தருகிறது ந. கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழியகராதி.

"அசுணம், பழந்தமிழிலக்கியங்களால் அறியப்படும் உயிரினங்களுள் ஒன்று. இது ஒருவகை விலங்கு என்றும் பறவை என்றும் கூறப்படுகிறது. இதனைக் குறிப்பிடுங்கால், 'அசுணம் என்பது விலங்குகளுள் ஒன்று என்று பலவிடத்தும், பறவைகளுள் ஒன்றென்று சிலவிடத்தும் குறிக்கப்படுகிறது. இதற்கு, யாழ் ஒலி (குழல் ஒலி, வண்டொலி, பாட்டொலி) முதலிய மெல்லிசையால் இன்புறுதல் முதலியனவும், பறையொலி (முரசொலி, வெடியொலி) முதலிய வல்லிசையால் துன்புறுதல் முதலியனவும் இயல்பு. இதனைக் குறிஞ்சி நிலத்துக்குரியதென்றும், புகை போன்ற மேனி உடையதென்றும், அச்சப் பொருள்களுள் ஒன்றென்றும், சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐந்தனுள் ஓசையில் ஈடுபட்டு உயிரையும் இழப்பது' என்றும் இ.வை. அனந்தராமையர் விளக்கிக் கூறியுள்ளார். அசுணம் பற்றிய இவ்வியல்புகள், நற்றிணை, அகநானூறு, கலித்தொகை, நான்மணிக்கடிகை, சீவகசிந்தாமணி, பெருங்கதை, கம்பராமாயணம், கூர்மபுராணம், காஞ்சிப்புராணம், பாகவதம் முதலிய இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. இவ்விலக்கியங்களில் அசுணம் இன்னோசை கேட்டு இன்புறுவதும் வல்லோசை கேட்டுத் துன்புறுவதும் ஆகிய பண்பே, பெரும்பாலும் உவமை வாயிலாகவும் பிற வாயிலாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனைப் பிடிக்க விரும்புவோர், இது வாழும் காட்டகத்தே சென்று, முதலில் இனிய யாழிசையை இசைப்பர். அதன் இசையில் மயங்கி நிற்கும் நிலையில் வலியப் பறையினை முழக்குவர். அவ்வல்லோசையால் துன்புற்று விழும்போது பிடித்துக் கொள்வர். வண்டுகள் மலைச்சாரலில் இமிர்கின்ற இன்னொலியினை அசுணம் யாழோசை எனக் கேட்டின்புறும் செய்தியினை நற்றிணையும் (244) அகநானூறும் (88) கூறுகின்றன. தலைவிக்கு இன்பமும் துன்பமும் உண்டாக்கும் தலைவன் மார்பினுக்கு, இனிய ஒலியையும் வலிய ஒலியையும் அடுத்தடுத்து உண்டாக்கி அசுணத்தைக் கொல்பவர்களின் கை உவமையாகக் கூறப்பட்டுள்ளது (நற்.304). தான் இசைக்கும் யாழோசையைக் கேட்டு இன்புற்றிருக்கும் அசுணத்தின் இன்னுயிர் நீங்குமாறு, அதனைப் பிடிப்போர் பறை முழக்கும் செய்தி கலித்தொகையில் (143) இடம் பெற்றுள்ளது. சங்க இலக்கியங்களிலேயன்றிச் சிந்தாமணி, கம்பராமாயணம் போன்ற நூல்களிலும் குறிப்பிடப்படும் அசுணம் இக்காலத்தில் இருப்பதாகத் தெரியவில்லை. இது காலத்தால் அழிந்துபட்ட உயிரினங்களுள் ஒன்றாகும். இன்னிசையால் மகிழ்ந்தின்புற்ற நிலையில் எழுப்பப்படும் வல்லோசை கேட்டுத் துன்புற்று உயிர்விடும் இந்த இயல்பே, சங்கக் காலத்தில் உவமையாகக் கூறி விளக்கும் அளவு மக்களால் அறியப் பெற்றிருந்த இந்த உயிரினம், பின்னர் முற்றிலும் அழிந்து போனதற்குக் காரணமாதல் கூடும்"[17] என்று வாழ்வியற் களஞ்சியம் குறிப்பிடுகிறது.

இதுகாறும் அசுணம் என்ற சொல் பயன்பாடு குறித்து அறிஞர்களிடையே இருந்த கருத்தொற்றுமைகளையும் வேற்றுமைகளையும் அறிந்து கொள்ள முடிகிறது.

**மதிப்பீடு**

★சங்கப் பாடல்கள் உருவாக்கக் காலத்தில் எண்ணற்ற சொற்கள் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. அவற்றுள் பல சொற்கள் இன்று வழக்கொழிந்து போயின எனலாம். மீதமுள்ள சொற்களைச் சமகாலத்தில் அடையாளப்படுத்த வேண்டிய தேவையிருக்கிறது.

★சங்கப் பாடல்களில் எண்ணற்ற பறவைகளும் விலங்குகளும் பதிவு செய்யப்பட்டுள்ளன. அவற்றுள் அசுணம் என்பது பறவையா? விலங்கா? என அறிய முடியவில்லை.

★அசுணம் என்று நேரடியாக நற்றிணையில் 2 பாடல்களும் அகநானூற்றில் ஒன்றுமாக மூன்று பாடல்கள் பதிவு செய்யப்பட்டுள்ளன. இதனையே

சொல்லடைவுகளும் குறிப்பிடுகின்றன.

★கலித்தொகை 143 ஆம் பாடலில் மானை என்ற சொல்லை அசுணமா என உரையாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். சொல்லடைவுகள் இந்தச் செய்தியைப் பதிவு செய்யவில்லை. இது ஆய்வுக்குரியதாகும்.

★வாழ்வியற் களஞ்சியம் சங்க இலக்கியம் தாண்டிப் பிற்கால இலக்கியங்களிலும் அசுணம் குறித்த பதிவுகள் உள்ளன என்கிறது. மேலும் தற்காலத்தில் இந்த உயிரினம் இல்லை எனவும் குறிப்பிடுகிறது.

★அசுணம் பற்றி பாடலாசிரியர்களும் உரையாசிரியர்களும் குறிப்பிடும் செய்திகள் பொதுவானவையாகும்.. யாழிசையை ஆழ்ந்து கவனிக்கும் பறவையிது. இதனைக் கொல்ல வேண்டுமென்றால் யாழிசைத்துப் பறைமுழக்க வேண்டும் என்பதாகும். உரைகளில் இது விலங்கு என்றும் பறவை என்றும் எழுதப்பட்டுள்ளன. இதுகாறும், எண்ணற்ற உயிரினங்களைத் தமிழ்ச் சமூகம் தொலைத்திருக்கிறது என்பதையும் அறிய முடிகிறது. இயற்கையின் அதீதமான படைப்புகளுள் ஒன்றாக அசுணம் இருந்திருக்கிறது.

★சங்ககாலப் படைப்பாளிகள் தாம் வாழ்ந்த நிலம் சார் உயிரினங்களைக் கவிதைகளில் பாடியிருந்ததால் காலங்கடந்தும் தொலைந்து போன உயிரினங்கள் குறித்துச் சொற்கள் வழி இன்று விவாதித்துக் கொண்டிருக்கிறோம்.

★சமகாலப் படைப்பாளிகளிடம் வாழ்நிலை சார்ந்த முதற், கரு, உரிப்பொருள்கள் படைப்புகளில் இடம்பெற வேண்டும் என்ற சிந்தனை மேலெழுகிறது.

★திணையியல், சூழலியல் சார்ந்து கலை, இலக்கியங்கள் பெரிதும் உருவாக வேண்டும் என்பதை நமக்குச் சங்க இலக்கியமும் சங்க இலக்கியச் சொற்களும் உணர்த்தி நிற்கின்றன.

**சான்றெண் விளக்கம்**


1. பாலசுந்தரம். ச., (உ.ஆ.), தொல்.சொல்., ஆராய்ச்சி காண்டிகையுரை, நூ.எ.156, ப.139.

2. பாலசுப்பிரமணியன். கு.வெ., (உ.ஆ.), நற்றிணை மூலமும் உரையும், பா.எ.244, ப.449.

3. மேலது., ப.450.

4. மேலது., ப.451.

5. நாராயணசாமி ஐயர். அ., (உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.420.

6. பாலசுப்பிரமணியன். கு.வெ., (உ.ஆ.), நற்றிணை மூலமும் உரையும், பா.எ.304, ப.560.

7. மேலது., ப.561.

8. நாராயணசாமி ஐயர். அ., (உ.ஆ.), நற்றிணை நானூறு, ப.518.

9. மேலது., ப.518.

10. வேங்கடசாமி. ந.மு., வேங்கடாசலம் பிள்ளை. ரா. (உ.ஆ.), அகம். பா.எ.88, ப.205.

11. மேலது., ப.206.

12. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), கலித்தொகை மூலமும் உரையும், பா.எ.143, ப.444.

13. மேலது., ப.446

14. விசுவநாதன். அ., (உ.ஆ.), கலித்தொகை மூலமும் உரையும், ப.623.

15. சிங்காரவேலு முதலியார். ஆ., அபிதான சிந்தாமணி, ப.25.

16. கதிரைவேற்பிள்ளை. ந. தமிழ்மொழியகராதி, ப.27.

17. வாழ்வியற் களஞ்சியம் (தொகுதி ஒன்று), ப.145.


**துணை நூல்கள்**


1. மாதையன். பெ., சங்க இலக்கியச் சொல்லடைவு, தமிழ்ப்பல்கலைக்கழக வெளியீடு, தஞ்சாவூர், 2007.

2. நாராயணசாமி. அ., (உ.ஆ.), நற்றிணை நானூறு, கழக வெளியீடு, திருநெல்வேலி, 1967.

3. பாலசுப்பிரமணியன். கு.வெ., (உ.ஆ.), நற்றிணை மூலமும் உரையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 2004.

4. வேங்கடசாமி நாட்டார். ந.மு., வேங்கடாசலம் பிள்ளை. ரா., அகநானூறு, கழக வெளியீடு, திருநெல்வேலி, 1961.

5. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), கலித்தொகை மூலமும் உரையும், கழக வெளியீடு, திருநெல்வேலி, 1943.

6. விசுவநாதன். அ., (உ.ஆ.), கலித்தொகை மூலமும் உரையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 2004.

7. சிங்காரவேலு முதலியார். ஆ., அபிதான சிந்தாமணி, சாரதா பதிப்பகம், சென்னை, 2001.

8. கதிரைவேற் பிள்ளை. ந., தமிழ்மொழியகராதி, ஏசியன் எஜீகேசனல் சர்வீசஸ், புதுதில்லி, 1981.

9. வாழ்வியற் களஞ்சியம் (தொகுதி ஒன்று), தமிழ்ப்பல்கலைக் கழகம் வெளியீடு, தஞ்சாவூர், 1986.

10. Thomas Lehmann And Thomas Malten, A WORD INDEX FOR CANKAM LITERATURE, Institute Of Asian Studies, Chemmancherry, Chennai, 1993.

11. பாலசுந்தரம். ச. (உ.ஆ.), தொல்காப்பியம் சொல்லதிகாரம், ஆராய்ச்சிக் காண்டிகை உரை, பெரியார் பல்கலைக்கழக வெளியீடு, சேலம், 2012

# அகரமுதலி இயக்ககம் நடத்தும்

# பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!

சொல்லாக்க அறிஞர்களின் துணையோடு தமிழின் கலைச்சொல் வளத்தை உயர்த்தும் நோக்கில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சார்பில் 01.10.2021ஆம் நாள்முதல் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் நடத்தப்பெறுகிறது. இப்பயிலரங்கத்தின் 2,3,4 மற்றும் 5ஆம் அமர்வுகள் முறையே 2021 அக்டோபர் 8, 15, 22, 29 ஆகிய நாள்களில் நடைபெற்றன. பயிலரங்க நிகழ்வுகளில் அயல்நாட்டு அறிஞர்கள், உள்நாட்டு அறிஞர்கள் பங்கேற்று பல்வேறு துறைசார்ந்த தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றினர். சொல்லாய்வாளர்கள், சொல்லாக்க அறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள் உள்ளிட்ட பலர் பங்கேற்றும் பார்த்தும் பயன்பெற்றனர். கலைச்சொற்களை அறிமுகம் செய்த சொலாக்க அறிஞர்களுக்கும், பங்கேற்பாளர்களுக்கும் இயக்ககத்தின் சார்பில் பாராட்டுச் சான்றிதழ்களும் பங்கேற்புச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன.

## 08.10.2021 ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

பேராசிரியர் **செ. இரா. செல்வக்குமார்**
வாட்டர்லூ, ஆன்டெரியா, கனடா

திருமதி **ச.ஞானா பியாற்றிசு**
நிருவாக இயக்குநர்
பன்னாட்டு உயர்(கல்வி) தமிழாய்வு நிறுவனம், பாரிசு,

மருத்துவர் **அருள்நங்கை**
மயக்கவியல்துறை மருத்துவர், மலேசியா

திரு. **முகிலன் முருகன்**
ஓம்தமிழ் நிறுவனத்தின் நிறுவனர் (ம) தலைமைச் செயற்குழு அதிகாரி, மலேசியா

முனைவர் **இ.இராவணன்**
நிருவாக உதவியாளர் மருத்துவம் (ம) ஊரக நலப்பணிகள் துறை, திருவாரூர் மாவட்டம்,

செல்வன் **க.முத்துவிக்னேசு**
ஒருங்கிணைப்பாளர், நொதுமி தமிழாய்வு நடுவம்

## 15.10.2021 ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

திரு. **மணி மு. மணிவண்ணன்**
தலைமைச் செயல் அலுவலர், செவான்டிசு நிறுவனம், மில்பிடாசு, கலிபோர்னியா, அமெரிக்கா

முனைவர் **அலெக்சிசு தேவராசு சேன்மார்க்**
துணைத்தலைவர், பிரான்சு தமிழ்ச் சங்கம், பாரிசு

முனைவர் **இரத்தின வெங்கடேசன்**
தலைவர், சிங்கப்பூர் தமிழ் இலக்கியக் களம்

முனைவர் **மு.கண்ணன்**
மேனாள் பதிப்பாசிரியர்,
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககம்

மரு. **சு.கார்த்தி**
குழந்தைகள் மருத்துவ வல்லுநர் (ம) பொது மருத்துவர், ஈரோடு மாவட்டம்.

## 22.10.2021 ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

திரு. **சூ.யோ. பற்றிமாகரன்**
மூத்த தமிழ் ஊடகவியலாளர்,
ஒக்ஸ்வோர்ட்,
ஐக்கிய இராச்சியம்

திரு. **இனியன்**
மேனாள் கல்வியியல் விரிவுரைஞர்,
மலேசியா

பொறிஞர் **பத்மப்ரியா இராகவன்**
இயக்குநர், டிவைன் இந்தியா நிறுவனம், பிரான்சு

மரு. **ச.தெட்சிணாமூர்த்தி**
தோல்நோய் சிறப்பு மருத்துவர், அறந்தாங்கி

முனைவர் **இரா. அறிவழகன்**
தமிழியல் ஆய்வாளர், திருவாரூர்.

## 29.10.2021 ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

திரு. **மகாதேவ ஜெயராமசர்மா**
மேனாள் தமிழ்மொழிக்கல்வி இயக்குநர், மெல்பேண்,
ஆஸ்திரேலியா

முனைவர் **நீற்றா பற்றிமாகரன்**
ஆசிரியர், கல்வியியலாளர், ஒக்ஸ்வோர்ட் , ஐக்கிய இராச்சியம்

பொறிஞர் **பத்மப்ரியா இராகவன்**
இயக்குநர், டிவைன் இந்தியா நிறுவனம், பிரான்சு

முனைவர் **மரு. ச. குமரவேல்**
பேராசிரியர், தலைவர்
முடநீக்கியல்துறை,
தஞ்சை மருத்துவக் கல்லூரி

திரு.. **நீச்சல்காரன்**
முதலமைச்சரின்
கணினித்தமிழ் விருதாளர்.

## அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில :



**பேராசிரியர் செ. இரா. செல்வக்குமார்**

| | | |
|---|---|---|
| Ion | – | இயனி |
| Negative charge | – | எதிர்மின்மம் |
| Hole | – | புரைமின்னி –(துளை மின்னி) |
| Mobile carrier | – | நகர்மின்னி |
| Tunneling | – | ஊடுருவல் |



**திருமதி ச.ஞானா பியாற்றிசு**

| | | |
|---|---|---|
| Froyo | – | உறைதயிர் |
| Cravado | – | உலர்மீன் (கருவாடு) |
| Tele Market | – | அழைப்பு அங்காடி |
| Coronana virus | – | மகுடை நச்சில் / தீநுண்மி |
| Auditory Image | – | உணர்வொலி வடிவம் |



**திரு. முகிலன் முருகன்**

| | | |
|---|---|---|
| Incognito | – | மறைநிலை |
| Cookie | – | நினைவி |
| Themes | – | வார்ப்புருகள் |
| Ransomware | – | பிணைமி |
| Cyber | – | மின்வெளி |



**மரு. அருள்நங்கை**

| | | |
|---|---|---|
| Encephalitis | – | மூளைவீக்கம் |
| Cannula | – | குழலூசி |
| Defibrillator | – | மின்னதிர்வி |
| CCU (Cardiac Care Unit) | – | மார்பியல் கண்காணிப்புப் பிரிவு |
| Obstetrician | – | மகப்பேற்றியலர் / மகப்பேற்று வல்லுநர் |



**முனைவர் இ. இராவணன்**

| | | |
|---|---|---|
| Defund | – | நிதி திருப்பு |
| Greeze | – | நிறையுணவு |
| Livestream | – | இணையத்தள நேரலை (அ)இணைய நேரலை |
| Cinematics | – | திரைக்காட்சிக்கலை |
| Over tank | – | மிசைத்தாங்கல் |



**செல்வன் க.முத்துவிக்னேஷ்**

| | | |
|---|---|---|
| Bestie | – | நேளர் |
| Data Scientist | – | தரவாய்வாளர் |
| Ping | – | அச்சழை |
| Bluetooth Speaker | – | ஊடலையொலிப்பான் |
| Webcam | – | கணிக்கண் |



**திரு. மணி மு. மணிவண்ணன்**

| | | |
|---|---|---|
| Whatsapp | – | என்னாப்பு |
| Cloud Computer | – | முகிற்கணினி |
| Agile Project Management | – | சுறுதித் திட்டப்பணி மேளாள்மை |
| Virus | – | தொற்று நுண்மம் / தொற்றி |
| Internet of Things | – | பொருள்களின் பிணையம் |

## அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில :

### முனைவர் அலெக்சிசு தேவராசு சேன்மார்க்



| | | |
|---|---|---|
| Health Insurance | – | மருத்துவக் காப்புறுதி |
| Vacuum Cleaner | – | துப்புரவி |
| Micro Oven | – | நுண்ணலைச் சூடேற்றி |
| Super Market | – | பேரங்காடி |
| Cosmopolitan | – | பெருமாநகர் |

### முனைவர் இரத்தின வெங்கடேசன்



| | | |
|---|---|---|
| Broadband Market | – | விரிவலைச் சந்தை |
| Bush Fire | – | புதர்த்தீ |
| Haze | – | புகைமூட்டம் / தூசு மூட்டம் |
| Fare Card | – | கட்டண அட்டை |
| Flyover | – | மேஞ்சாலை |

### முனைவர் மு. கண்ணன்



| | | |
|---|---|---|
| Blood Moon | – | பேரொளிப் பெருநிலா |
| Blind Curve | – | கண்மறை வளைவு |
| Presstitute | – | பிறழ் ஊடகம் |
| Churnalism | – | குழப்ப ஊடகவியல் |
| Lying Press | – | புரட்டு ஊடகம் |
| Media Bias | – | ஒருசார்பு ஊடகம் |

### மரு. சு. கார்த்தி



| | | |
|---|---|---|
| Pica | – | வயா நோய் |
| Maternity Home | - | ஈனில் |
| Stem Cells | – | வாய்ப்பமை வளர்செல்கள் |
| Chromosome | - | இனக்கீற்று |
| Empathy | – | கண்ணோட்டம் |

### திரு. சூ.யோ. பற்றிமாகரன்



| | | |
|---|---|---|
| Elbow bumb | – | முழங்கை முட்டுவணக்கம் |
| Tamilness | - | தமிழ்த்தன்மை |
| God Particle | – | கடவுள் துணிக்கை |
| Antivaxxer | – | நோய்முற்தடுப்பூசி எதிர்ப்பாளர் |
| Finfluencer | – | கவர்ச்சிகர நிதிமதிஞர் |

### திரு. இனியன்



| | | |
|---|---|---|
| Cooperative Learning | – | கூடிக்கற்றல் |
| Contextuval Learning | – | சூழமைவுக் கற்றல் |
| Metacognition | – | அறிதலறிவம் |
| Flipped Classroom | – | நிலைமாற்ற வகுப்புகள் |
| Stakeholders | – | நலப்பங்கர் |

### பொறிஞர் பத்மப்ரியா இராகவன்



| | | |
|---|---|---|
| Google / Googol | – | ஐம்பூரியம் |
| Abibliophobia | – | நூல்வேட்கைப் பீதி |
| Metrosexual | – | மடந்தைக்காளை |
| Roller Skate | – | உருள் காலணி |
| Doppelganger | – | உயிரியல் சாரா இரட்டையர் |

## அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில :

மரு. **ச.தெட்சிணாமூர்த்தி**



| | | |
|---|---|---|
| Cryo gun | – | உறைப்பான் |
| Canites | – | வெளிர்முடி |
| Eczema | – | அர்ப்புரை |
| Herd immunity | – | பெருந்திரள்நோய் எதிர்ப்பாற்றல் |
| Acanthosis nigricans | – | மையணல் |

முனைவர் **இரா. அறிவழகன்**



| | | |
|---|---|---|
| Bulldozer | – | ஏர்நிகரி |
| Echo effects | – | பொருளிடை மாற்றம் |
| Locavore | – | தம்மண் பற்றி |
| Ghost | – | தொடரறு |
| Word salad | – | வெற்றுச்சொல் (அ) வெற்றுப்பொருள் |

திரு. **மகாதேவ ஜெயராமசர்மா**



| | | |
|---|---|---|
| Western Side | – | படுவான்கரை |
| Eastern Side | - | எழுவான்கரை |
| Funeral Hal | – | மலர்ச்சாலை |
| Steam boat | - | நீருந்து |
| Crown Casino | – | பணத்தோட்டம் |

முனைவர் **நீற்றா பற்றிமாகரன்**



| | | |
|---|---|---|
| Dumped | – | ஒருபக்க விருப்பு |
| Belissima | - | பேரழகு |
| Adoration | – | பேரன்புணர்வு |
| Truthiness | – | சான்றில்லா உண்மை |
| Pivot Space | – | பல்பயன்பாட்டிடம் |

பொறிஞர் **பத்மப்ரியா இராகவன்**



| | | |
|---|---|---|
| Darkne | – | இருட்டிணையம் |
| Deepweb | – | ஆழிணையம் |
| Bloatware | – | மென்பொருள் உப்பல் |
| Phablet | – | நவில் கணினி |
| Not - Spot | – | வெற்றலை |

முனைவர் **மரு. ச. குமரவேல்**



| | | |
|---|---|---|
| Superior Gemelli | – | மேல் இரட்டைத்தசை |
| Inferior Gemelli | – | கீழ் இரட்டைத்தசை |
| Middle Phalanx | – | நடுவிரல் எலும்பு |
| Distal Phalanx | – | சேய்மை விரல் எலும்பு |
| Glenoid | – | தோள் குழியம் |

திரு. **நீச்சல்காரன்**



| | | |
|---|---|---|
| Keypair | – | இணைகுறி |
| Private Key | – | மறைகுறி |
| Hacking | – | கொந்துதல் |
| Pseudoblock | – | போலியடைப்பு |
| Pseudodirectory | – | போலிக்கோப்பகம் |





# சங்க இலக்கிய அகப்பாடல்களில் குளிர்

சங்க இலக்கியம் என்பது சங்ககால மக்களின் வாழ்வியலை விவரிக்கும் வரலாற்றுப் பெட்டகமாகத் திகழ்கின்றது.மக்களின் வாழ்வியலை எடுத்துரைப்பதின் ஊடாகச் சங்க இலக்கியமானது சொற் களஞ்சியமாகவும் பொருட்களஞ்சியமாகவும் இருப்பதை அறியமுடிகிறது.

சங்க இலக்கியத்தில் இடம்பெற்ற சில சொற்கள் சமகாலத்தில் வழக்கில் இல்லாமல் போய்விட்டன. சங்க இலக்கியக் காலக்கட்டத்தில் வழக்கிலிருந்த குளிர் என்ற சொல்லானது சங்க இலக்கிய அகப் பாடல்களில் பயன்படுத்தப்பட்டுள்ள பொருண்மை குறித்தும், சமகாலத்திலும் அதே பொருண்மையில் பயன்படுத்தப்படுகின்றதா என்பதைக் குறித்தும் இக்கட்டுரையில் காண்போம்.

### சங்க இலக்கியத்தில் குளிர்

சங்க இலக்கியத்தில் குளிர் என்ற சொல்லானது 1.குளிர்ச்சி 2.கிளிகடி கருவி 3.அரிவாள் என்ற மூன்று பொருண்மைகளில் பயன்படுத்தப்பட்டுள்ளது. குளிர் எனும் சொல்லானது சங்க இலக்கியத்தில் 16 இடங்களில் புலவர்களால் எடுத்தாளப்பட்டுள்ளது. அவற்றுள், குளிர் என்ற சொல்லானது சங்க இலக்கியத்தில் குளிர்ச்சி எனும் பொருளைத் தெரிவிக்கும் விதமாக 9 இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

சங்க இலக்கிய அகப்பாடல்களில் 5 இடங்களில் குளிர்ச்சி எனும் பொருண்மையில் பயன் படுத்தப்பட்டுள்ளது. அவை முறையே நற்றிணையில் 1 பாடல் , குறுந்தொகையில் 1 பாடல், அகநானூற்றில் 3 பாடல்கள் ஆகும்.

சங்க இலக்கியத்தில் குளிர் என்னும் சொல்லானது கிளிகடி கருவி என்னும் பொருண்மையில் 6 இடங்களில் இடம்பெற்றுள்ளது.

அவற்றுள் சங்க இலக்கிய அகப்பாடல்களில் 5 இடங்களில் கிளிகடி கருவி எனும் பொருளில் கையாளப்பட்டுள்ளது. அவை முறையே நற்றிணையில் 1 பாடல் , குறுந்தொகையில் 2 பாடல்கள், அகநானூற்றில் 1 பாடல், குறிஞ்சிப்பாட்டில் 1 பாடலிலும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

அரிவாள் என்னும் பொருண்மையில் குளிர் எனும் சொல்லானது புறப்பாடலாகிய மலைபடுகடாமில் 1 இடத்தில் மட்டும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

### அகப்பாடல்களில் குளிர்ச்சி(குளிர்)

அகப்பாடல்களில் குளிர் எனும் சொல்லானது குளிர்ச்சி எனும் பொருண்மையில் 5 இடங்களில் கையாளப்பட்டுள்ளது. அவற்றுள் தலைவன் மற்றும் தலைவியின் பிரிவுத்துன்பத்தை வெளிப்படுத்தும் 3 பாடல்களும், குளிர்ச்சியுடைய தினைப்புனம் என்பதை 1 இடத்திலும், குளிர்ச்சி தங்கிய பிடவ மலர் என்பதை 1 இடத்திலும் குறிக்கும் வண்ணம் குளிர் எனும் சொல்லானது குளிர்ச்சி எனும் பொருண்மையில் இடம்பெற்றுள்ளது.

*"தளிர்சேர் தண்தழை தைஇ, நுந்தை*
*குளிர்வாய் வியன்புனத்து எல்பட வருகோ?"*
*( நற்றிணை: 204 )*

*"நீர் எதிர் கருவிய கார்எதிர் கிளைமழை*
*ஊதையம் குளிரொடு பேதுற்று மயங்கிய*
*கூதிர் உருவின் கூற்றம்."* *(குறுந்தொகை:197)*

*" முளரி கரியும் முன்பனிப் பானாள்,*
*குன்று நெகிழ்வு அன்ன, குளிர்கொள் வாடை?"*
*(அகநானூறு:163)*

*" குளிர்கொள் பிடவின் கூர்முகை அலரி*
*வுண்டுவாய் திறக்கும் தண்டா நாற்றம்"*
*(அகநானூறு: 183)*

*"பெருங்கலி வானம் தலைஇய,*
*இருங்குளிர் வாடையொடு வருந்துவள் எனவே!"*
*(அகநானூறு:337)*

குளிர் எனும் சொல்லானது குளிர்ச்சி எனும் பொருண்மையில் மேற்கண்ட 5 அகப் பாடல்களில் கையாளப்பட்டுள்ளது என்பதை அறிய முடிகிறது.

### அகப்பாடல்களில் கிளிகடி கருவி(குளிர்)

சங்க அகப்பாடல்களில் குளிர் எனும் சொல்லானது கிளிகடி கருவி எனும் பொருண்மையில் 5 இடங்களில் இடம்பெற்றுள்ளது.

அவற்றுள் கொடிச்சியாகிய தலைவியின் கையில் வைத்திருக்கும் குளிர் எனப்படும் கிளிகடி கருவி எனும் பொருண்மையில் 3 இடங்களிலும், பரண்மீது அமர்ந்து ஒளியெலுப்பி கிளியோட்டும் தலைவி பயன்படுத்தும் கருவி கிளிகடி கருவி என்று தெரிவிக்கும் வண்ணம் 2 இடங்களில் கையாளப்பட்டுள்ளது.




மு.ஜெயசூரியா,
முதுகலைத் தமிழ் முதலாமாண்டு மாணவர்.
தூய நெஞ்சக் கல்லூரி(தன்னாட்சி).
திருப்பத்தூர் மாவட்டம்.


*"குளிர்படு கையள் கொடிச்சி செல்கஎன,*
*நல்ல இனிய கூறி, மெல்லக்*
*கொயல்தொடங் கினரே கானவர்"*
*( நற்றிணை:306)*

*"சுடுபுன மருங்கில் கலித்த ஏனற்*
*படுகிளி கடியும் கொடிச்சிகைக் குளிரே"*
*(குறுந்தொகை:291)*

*" பிடிக்கை அன்னப் பெருங்குரல் ஏனல்*
*உண்கிளி கடியும் கொடிச்சிகைக் குளிரே*
*சிலம்பின் சிலம்பும் சோலை"* *(குறுந்தொகை:360)*

*"சிறுசினைப் படுகிளி கடீஇயர், பல்மாண்*
*குளிர்கொள் தட்டை மகன்இல புடையாச்*
*சூர்அர மகளிரின் நின்றநீ மற்று*
*யாரையோ."* *(அகநானூறு:32)*

*"சாரல் சூரல் தகைபெற வலந்த*
*தமலும் தட்டையும் குளிரும் பிறவும்*
*களிகடி மரபின ஊழ்ஊழ் வாங்கி"*
*(குறிஞ்சிப்பாட்டு:40 44)*

மேற்கண்ட சங்க அகப்பாடல்களில் குளிர் எனும் சொல்லானது தினைப்புனத்தில் தினையை உண்ண வரும் கிளிகளை ஒலி எழுப்பி விரட்டும் கிளிகடி கருவி எனும் பொருண்மையில் கையாளப்பட்டுள்ளது.

### முடிவுரை

சங்க அகப்பாடல்களில் குளிர் எனும் சொல்லானது குளிர்ச்சி எனும் பொருண்மையில் 5 இடங்களிலும் கிளிகடி கருவி எனும் பொருண்மையில் 5 இடங்களிலும் கையாளப்பட்டுள்ள விதம் குறித்துப் பார்க்கப்பட்டது.

குளிர் எனும் சொல் இன்றைய காலக்கட்டத்தில் சராசரி வெப்பநிலையை விடக் குறைவான நிலையை அடைதல் (become cold), மகிழ்ச்சி அடைதல் (feel happy), வெப்பமே இல்லாத நிலை (coldness ) முதலிய பொருண்மைகளில் வழக்கிலுள்ளது.

கிளிகடி கருவி முற்றிலும் வழக்கிழந்ததை அறிவதுடன் குளிர்ச்சி என்பது 'மகிழ்தல்' என்று சங்க அக இலக்கியத்தில் இல்லாத பொருண்மையில் சமகாலத்தில் பயன்படுத்தப்படுகிறது. அவ்வகையில் குளிர் எனும் சொல் சங்க அக இலக்கியத்தில் பயன்படுத்தப்பட்டு வந்த பொருண்மைகள் குறித்தும், சமகாலத்தில் குளிர் எனும் சொல் பயன்படுத்தப்படும் விதம் குறித்தும் இக்கட்டுரையில் பேசப் பட்டுள்ளது.